லிப்கோ வெளியீடு

முதற்பதிப்பு : ஜூலை 1956
பதிப்புரிமை பெற்றது





'முத்தமிழ்க் கலா வித்துவரத்தினம்'
அமரர் அவ்வை சண்முகம் அவர்கள் நினைவாக
மதுரை காமராஜ் பல்கலைக் கழகத்துக்கு
அன்புடன் அளிக்கப்பட்டது.

27-1-1979

விலை
ரூ. 1—0—0

சென்னையில் லிப்கோ ஏஜெண்டுகள் :
எம். தாமோதரம் & கம்பெனி,
அப்பா பில்டிங்ஸ், எஸ்பிளனேட், சென்னை-1.

# மதிப்புரை

துப்பறியும் கதைகளுக்கு இப்போது நல்ல வரவேற்பு இருக்கிறது என்பதை சமீபத்தில் பிரசுரிக்கப்பட்டுள்ள துப்பறியும் நாவல்களின் எண்ணிக்கையிலிருந்து சுலபமாக அறியலாம். இந்த வகையில் பல புதிய எழுத்தாளர்கள் தமிழ் எழுத்துலகில் அறிமுகப்படுத்தப்பட்டு வருகின்றனர். அவர்களில் ஒரு சிலரின் உயர்ந்த படைப்புகளைக் காணும் போது. இத்தகைய சிறந்த எழுத்தாளர் வாய்ப்பில்லாமல் இத்தனை காலம் தம் எழுத்துத் திறமையைக் காட்டாமல் இருந்து விட்டாரே என்று எண்ணி வருந்தவும் வேண்டி யிருக்கிறது. இந்த நாவலாசிரியர்களில் நண்பர் ஏ. எம். மீரான் அவர்களுக்கும் ஒரு நல்ல ஸ்தானம் அவசியம் உண்டு என் பதற்கு இந்தத் துப்பறியும் நூலே சான்று!

வாலிப ஆசிரியர்கள், பொதுவாக, தம்முடைய மூளைக்கு அதிகப் பயிற்சி கொடுக்கிறார்களே யன்றி, போதுமான உணவு கொடுப்பதில்லை. ஆனால், இந்த நாவல் ஒரு ருசிகரமான கதையையும், அந்தக் கதையை அலங்கார அம்சமாக வர்ணிக் கும் வகையில் பல்வேறு சம்பவங்களையும், சாமர்த்தியமாகப் பின்னப்பட்டு, ஜீவனோடும் புஷ்டியோடும் ஓடுவதைக் காண் கிறோம்.

படிப்போருடைய காலத்தை வீணாக்காமல், அதிகமான அறிவைக் கொடுக்கும் நூலை இயற்றும் ஆசிரியனே அதிகப் பயன் தருபவன் ஆவான் என்று சிலர் சொல்லலாம். ஆனால் அந்தப் பயனைப் பெற, அந்த நூலைப் பொறுமையோடு முழுதும் படிக்கவேண்டும் என்பதும் அவசியம். "இந்தக் கதையைப் படிக்க ஆரம்பிச்சுட்டேன். கீழே வைக்க மனசே இல்லே!" என்று சொல்லும் வகையில், மேலும் மேலும் படிப் போரின் ஆவலைத் தூண்டியவாறு இந்தக் கதை விறுவிறுப் புடன் செல்லுகிறது.

இந்தக் காலத்தில் உண்மையான சர்வ கலாசாலை நூல் நிலையமே! பெரியோர் ஆன்மாக்கள் வாழும் புண்ணிய ஸ்தலம் நூல் நிலையந்தான். அங்கே எப்பொழுதும் அறிவு மணம் கமழ்ந்து கொண்டிருக்கும். "ராஜ்யத்தை விட எனக்கு நூல் நிலையந்தான் பெரியதாகும்!" என்று ஷேக்ஸ்பியர் சொன்னதில் சற்றும் மிகையில்லை. நல்ல நண்பர்களுக்கு அடுத்தபடியில் ஸ்தானம் வகிப்பவை, நல்ல நூல் நிலையங்களே! இப்படிப் பட்ட நூல் நிலையங்களில் இடம்பெறத் தக்கது இந்த அழகான நாவல்.

"நூல்களைப்படிப்பது ஒன்றிலேயே காலம் முழுதும் செலவு செய்பவர்கள் பெரிய சோம்பேறிகள்" என்பது ஸ்ட்னி ஸ்மித்தின் வாக்கு. இது ஒரு வகையில் சரிதான். சிந்திக்காமல் படிப்பது, ஜீரணிக்காமல் உண்பதைப் போலத்தான். அப்படிச் சிந்திக்காமல் படித்தால், ஒருவேளை மூளை செழிப்புள்ளதாக மாறலாம்; ஆனால் ஒரு நாளும் தெளிவுள்ளதாக மாருது. துப்பறியும் நாவல்கள் சிந்திக்கச் செய்வதால்தான் சிந்திக்க விரும்பும் பலர் துப்பறியும் கதைகளை விரும்பிப் படிக்கின்றனர்.

நண்பர்களைப்போலவே நூல்களும் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும். நல்ல நூல்கள் சில போதும். இதயத்திலிருந்து உதிக்கும் நூல்தான் இதர இதயங்களையும் கவரவல்லது. இது வேண்டுமானால் வேறு கலைத்திறமை எதுவும் அவசியமில்லை.

உண்மையிலேயே நல்ல நூல்கள் காட்டில் மலரும் புஷ்பங்களைப் போல பூரணமான வஸ்துக்கள். இயற்கையாகவும் எதிர்பாராத அழகுடையனவாகவும் இருக்கின்றன. இத்தகைய புஸ்தகங்களே நாட்டுக்குத் தேவை. சாதாரண நூல்கள் இப்போது நாட்டுக்குத் தேவை இல்லை. இன்னும் சரியாகச் சொல்லப்போனல், சாதாரண நூல்கள் என்பன, நம்முடைய தவறுகளுக்குப் பெயரிடுவதைத் தவிர வேறென்றுமில்லை. படிக்கத் தெரியாதவனைப்போல, படிக்கத் தகாதவைகளைப் படிப்பவனும் ஒன்றும் அறியாதவனே. ஆனால் நல்ல நூலொன்று வெளியானல், உணவு உண்ணுமுன் ஆண்டவனுக்கு வந்தனம் கூறுவதைப்போல நல்ல புது நூலொன்று வெளிவந்ததும் வந்தனம் சொல்லக் கடமைப் பட்டவர்களாக இருக்கிறோம். இந்த நூலுக்கு அப்படி வந்தனம் செலுத்தவேண்டிய அவசியமுண்டா?

வாசகர்கள் இந்தப் புஸ்தகத்தைப் பூராவும் வாசித்துப் பார்த்துத் தீர்ப்புச் சொல்லவேண்டிய விஷயம் இது.

ஆனால் ஒன்று நிச்சயமாகச் சொல்லலாம். சொந்த முயற்சியால் முன்னுக்கு வந்துள்ள இதன் ஆசிரியர், உயர்ந்த காவியம் ஒன்றைச் சீக்கிரத்தில் சிருஷ்டித்து, தம் வாழ்வையே ஓர் உன்னதக் கவிதையாக சிருஷ்டித்துக் கொள்ளுவார் என்பதற்கு வேண்டிய அம்சங்கள் இந்த நூலில் பல இடங்களில் காணப்படுகின்றன என்று நிச்சயமாகக் கூறலாம்.

திருவல்லிக்கேணி,<br>6-7-1956.

ஆர். பி. மல்லாரி.

# என்னுரை

நாடு சுதந்திரம் பெற்ற பிறகு பல துறைகளில் முன்னேறி விட்ட நாம், பத்திரிகை, புத்தகங்கள் படிப்பதிலும் கணிசமாக வளர்ச்சி யடைந்திருக்கிறோம். இந்தியாவிலுள்ள ஒரு சில ஆங்கிலப் பத்திரிகைகளைத் தவிர அச்சிலும் அமைப்பிலும் பொருள் செறிவிலும் சிறந்து விளங்கும் புத்தகங்களையும் பத்திரிகைகளையும் தயாரித்து வழங்குவதில் தமிழ்நாடு முதலிடம் பெற்றிருக்கிறது என்பது மிகையல்ல. புதுப்புது விஷயங்களை, கவர்ச்சிகரமாக அழகிய முறையில் அளிப்பதும் தமிழ்நாடு தான். குறிப்பாக துப்பறியும் இலக்கியம் தனக்கென ஒரு தனி ஸ்தானத்தைப் பெற்றுக்கொண்டது. தமிழ் நாட்டில் கடந்த சில ஆண்டுகளில் நூற்றுக்கணக்கான துப்பறியும் நாவல்கள் வெளி வந்திருக்கின்றன. துப்பறியும் இலக்கியத்துக் கென்றே தமிழில் தரமான பத்திரிகைகளும் வெளிவருகின்றன. பிரசித்தமான ஆசிரியர்களும் துப்பறியும் இலக்கியத்துக்குப் புதியவர்களும்கூட இந்தத் துறையில் நல்ல வெற்றி யடைந் திருக்கிறார்கள்.

என்னுடைய துப்பறியும் சிறுகதைகளையும் குறு நாவல்களை யும் படித்த வாசகர்களும் நண்பர்களும் எனக்குப்பெருமளவில் ஆதரவு தந்தார்கள். அவர்கள் காட்டிய உற்சாகம்தான் இந்நாவலை எழுதுவதற்குத் தூண்டுகோலாக அமைந்தது என்பதை நான் பெருமிதத்தோடு கூறிக் கொள்ளுகிறேன்.

துப்பறியும் கதை எழுத நான் எனக்கென ஒரு பாணியை அமைத்திருக்கிறேன். "எழுதுங்கள், எழுதுங்கள், துப்பறியும் கதைகளாக, இந்தப் பாணியிலேயே எழுதுங்கள்" என்று மதிப்புக்குரிய ஆசிரியர் "சிரஞ்சீவி" அவர்கள் அடிக்கடி எனக்கு உற்சாகமூட்டி வந்ததும் என் எழுத்து வளர்ச்சிக்குத் துணை புரிந்தது என்பதை இங்கு கூறிக் கொள்ளுகிறேன்.

சாதாரணமாக ஒரு சிறு கதை எழுதிவிடுவது அவ்வளவு கஷ்டமல்ல. நாவலொன்று எழுதிவிடுவதும் சிரமமான காரியம் அல்ல. ஆனால் துப்பறியும் கதை எழுதுவதற்கென்று ஒரு விசேஷ ஆற்றல்வேண்டும். சிறு கதைகளைப்போல ஒரே ஒரு சிறு நிகழ்ச்சியை வைத்துக்கொண்டு வார்த்தைச் சிலம்பமாடி கதையை முடித்து, துப்பறியும் கதை படிக்கும் வாசகர்களைத் திருப்திப்படுத்திவிட முடியாது. துப்பறியும் கதைகளில் குற்ற வாளி யார் என்பது கடைசிவரை மர்மமாகவே இருக்கவேண்டும்.

துப்புத் துலக்குவதற்குள்ள உளவுகளை ஆங்காங்கே கொடுத்தாலும், துவக்கம் முதல் இறுதிவரை நிரபராதிகள் மீதெல்லாம் பழி ஏறும் வகையில் சம்பவங்களை நிறையப் புகுத்தவேண்டும். திடுக்கிடும் நிகழ்ச்சிகள் வருவதும் எதிர்பாராத வகைகளில் குற்றவாளியின் வேஷம் கலைவதும் துப்பறியும் கதையின் துருப்புச் சீட்டு. சுவையான சம்பவப் பின்னல்களால் வாசகர்களின் கவனத்தை ஊன்றச்செய்வது துப்பறியும் கதையின் சிறப்பான அம்சம். "அபாயச் சீட்டி"ல் இந்த அம்சம் ததும்பி நிற்கவேண்டும் என்பதற்காகச் சலியாமற் பாடுபட்டிருக்கிறேன்.

"அபாயச் சீட்டு" துப்பறியும் கதை படிக்கும் வாசகர்களை திருப்திப்படுத்தும் என்று பெரிதும் நம்புகிறேன். என் நம்பிக்கை எவ்வளவு தூரம் உறுதியாகியிருக்கிறது என்பதை முடிவுசெய்யும் பொறுப்பை உங்களிடமே விட்டு விடுகிறேன்.

"அபாயச் சீட்டு" என் முதல் முயற்சி. முதல் நாவலே எனக்குப் பூரண வெற்றியைத் தந்திருக்கிறது; ஏனென்றால் கையெழுத்துப் பிரதியைப் படித்துப் பார்த்த "லிப்கோ" ஸ்தாபனத்தினர், கதையை ரசித்துப் பாராட்டியதுடன் புத்தகமாக வெளியிடவும் உடனே ஒப்புக்கொண்டு விட்டார்கள். என் முதல் முயற்சிக்கு இத்தகைய ஆதரவைத் தந்து அழகிய முறையில் அதை அச்சேற்றிப் பிரசுரிக்க முன்வந்த "லிப்கோ" ஸ்தாபனத்தினருக்கு நான் என்றும் கடமைப்பட்டவன். அவர்களுக்கு என் நன்றி.

"அபாயச் சீட்டு"க்கு அழகிய முன்னுரை தந்து உதவிய பிரபல எழுத்தாளரும் நாடக ஆசிரியருமான ஆர். பி. மல்லாரி அவர்கள் எண்ணிலா இளைஞர்களுக்கு எழுத்துத் துறையில் ஊக்கம் காட்டி ஆக்கம் தருபவர்கள். "ஊருணி நீர் நிறைந் தற்றே உலகவாம் பேரறிவாளன் திரு" என்பதற்கு இலக்கணமாக விளங்குபவர்கள். அவர்களுக்கு என் நன்றி.

எனக்கு அன்னை தந்தையாக, ஆசானாக, எழுதக் கற்றுக் கொடுத்த குருவாக விளங்கிவரும் என் தாய் மாமா ஜனாப் எம். அப்துல் வஹ்ஹாப் எம். ஏ., பி. டி. எச். அவர்களுக்கு நான் என்றென்றும் கடமைப்பட்டவன். அவர்களுக்கே இந்த நூலைச் சமர்ப்பிக்கிறேன்.

சென்னை-16,
5-7-1956.

ஏ. எம். மீரான்.

## உள்ளே அத்தியாயங்கள்

## கதையில் நடமாடும் முக்கிய பாத்திரங்கள்

**பீதாம்பரம்**

'துப்பறியும் சிங்கம்' என்று பெயரெடுத்த அசகாய சூரர்.

**சுகுமாரன்**

பீதாம்பரத்தின் சீடன்; அவருடைய வலது கை போன்றவன்.

**விமலநாதன்**

பிரபல டாக்டர். அந்தஸ்தில் குறைந்த பெண்ணை மணந்ததற்காக மகனைத் தள்ளிவைத்தவர். முதலில் கொலைபடுபவர் இவர்தான்.

**நாராயணன்**

டாக்டர் விமலநாதனின் புத்திரன். தந்தையின் அந்தஸ்து பேதக் கொள்கையை ஒப்புக் கொள்ளாதவன்.

**கோபி**

டாக்டரின் உடன் பிறந்த தம்பி. அண்ணனுக்கு நேர்மாருன குணமுடையவர்.

**ரோஹிணி**

நடத்தை கெட்ட புருஷனுல் மனம் உடைந்து தனியாக வாழ்ந்து கொண்டிருந்தவள். அழகுப்பதுமை என்று பீதாம்பரமே ஆச்சரியப்பட்டிருக்கிருர்.

**சுந்தரமூர்த்தி**

ரோஹிணியின் சூதாடிக் கணவன். பணம் காய்க்கும் மரம் தன் மனைவி, என்று எண்ணுபவன்.

**மனோகரன்**

ரோஹிணியின் மாமாவுடைய வலது கை போன்றவன். ரோஹிணி கொலைப் படுவதற்கு முன் அவள் தோழியின் கணவன் போல நடித்தவன். அவள் மாமா இறந்ததும் தலைமறைவாகச் சென்று விட்டவன்.

# 1. விநோத விளம்பரம்

காலை மலர்ந்தது. கதிரவன் மேலே மேலே எழுந்து உலகுக்கு ஒளியைப் பெருக்கிக் கொண்டிருந்ததுடன் சூட்டையும் வளர்த்துக் கொணடே வந்தான். ஜன்னலில் போட்டிருந்த திரைச் சீலையையும் ஊடுருவிக கொண்டு துப்பறியும் நிபுணர் பீதாம் பரத்தின் மேனியில் சுரீர் சுரீர் என ஆதவனின் கதிர்கள் குத்தின வென்றால் மணியைப்பார்த்துக் கொள்ளவேண்டியது தானே!

புரண்டு புரண்டு படுத்த பீதாம்பரம் 'படக்' கென்று எழுந்திருக்க மனமில்லாமல் வர வர ஏன்தான் சோம்பேறியாகி விட்டாரோ தெரியவில்லை. அவர் சூரத்தனம் கொஞ்ச நாட்களாக வெளியாகாதிருப்பது தானோ என்னவோ? 'படக்' 'படக்' கென்று கண்களைக் கொட்டிக்கொண்டு முகட்டையே பார்த்த வாறு படுக்கையில் கிடந்தார். அறைக்கு வெளியே யாரோ வரும் காலடியோசை கேட்டு, கதவுப் பக்கம் நோக்கினார். அவருடைய சகா சுகுமாரன் கையில் ஒரு தினசரிப் பத்திரிகையை விரித்துப் பிடித்துக்கொண்டு வந்தவன், "ஸார், ஒரு அதிசயம்..." என்று சொல்லிவிட்டு, பத்திரிகையை பீதாம்பரத்திடம் கொடுத்தான். அவர் அந்தத் தினசரிப் பத்திரிகையில் சுகுமாரன் காட்டிய இடத்தைப் பார்க்க ஆரம்பித்தார். இதற்குள் வேலைக்காரன் காலைத் தபால்களைப் பீதாம்பரத்திடம் கொண்டு வந்து நீட்டினான். பத்திரிகையிலுள்ள அதிசயச் செய்தியைப் பற்றி சுகுமாரனிடம் பேசுவதற்குள் தபால் வந்து விடவே அவற்றைக் கவனிக்க ஆரம்பித்தார். முதல் கவரைப் பிரித்துப் படித்ததுமே அவர் முகம் ஏழு கோணங்களில் வளைந்து நெளிவதைக் காணத் தவறவில்லை சுகுமாரன்.

"சுகுமாரா! நீ மட்டும் தான் அதிசயச் செய்தியைக் கொண்டு வருவாயா? இதோ! அதைவிடப்பெரிய அதிசயம்" என்று சொல்லிவிட்டு அக் கடிதத்தை சுகுமாரனிடம் கொடுத்தார் பீதாம்பரம். சுகுமாரனுக்கு ஆச்சரியத்தில் மூச்சே நின்று விடும் போலிருந்தது. கடிதத்தின் வாசகம்:

"துப்பறியும் பீதாம்பரம் அவர்களுக்கு,

"வஞ்சம் தீர்க்கும் நோக்கத்துடன் கொலை செய்யத் திட்டமிடப்பட்டுள்ளது. ஒவ்வொரு கொலை நடக்கு முன்பும் கொலை நடக்கும் நேரமும் சாத்தியப்பட்டால்

இடமும் கூட, தினசரிப் பத்திரிகையில் விளம்பரம் மூலம் தெரிவிக்கப்படும். உங்களுக்குத் திறமையிருந்தால் இந்தக் கொலைகளைத் தடுக்க முயன்று பாருங்கள். ஆனால், நீங்கள் கொலை நடக்க முடியாதபடி பார்த்துக் கொள்ள முனைவதாகச் சொல்லி எக்குததப்பாக நடந்து கொண்டால் ஏற்கெனவே திட்டமிடப்பட்டுள்ள கொலைகளைவிட அதிகமான கொலைகள் நடந்து விடுமோ வென்றுதான்பயமாயிருக்கிறது. இன்றைய நடவடிக்கை, "காலைச் செய்தி"யில் விளம்பரமாகத் தரப்பட்டுள்ளது.

இப்படிக்கு,

......................"

'காலைச் செய்தி'ப் பத்திரிகையில் இரண்டாம் பக்கத்தில் வலது கோடியில் மேலே ஓர் அங்குல அகலத்தில் பிரசுரமாகி யிருந்த விளம்பரம் இதுதான் :

"அன்புள்ள பீதாம்பரம் அவர்களுக்கு,

இன்று இரவு 12-5க்கு ஜார்ஜ் டவுனில் உங்கள் முயற்சியைத் துவக்குங்கள்"

சுகுமாரன் துப்பறியும் பீதாம்பரத்தை நோக்கினான். அவர் சுகுமாரனைப் பார்த்து இலேசாகச் சிரித்தார். "என்ன சுகுமாரா அசந்து விட்டாய்? இரு! ஒரே நிமிஷத்தில் வந்து விடுகிறேன்" என்று சொல்லிவிட்டு, குளிக்கும் அறைக்குள் விரைந்தார். சுகுமாரனுக்கு யோசனையாகிவிட்டது. குற்றம் நடந்த பிறகு, குற்றம் புரிந்தோரைத் தேடுவது அநேகமாகத் துப்பறிபவர்களின் வேலை. ஆனால் குற்றம் நடக்குமுன்பே அதைப் பற்றி முன் னெச்சரிக்கை செய்து, துப்பறியும் நிபுணர்களுக்குச் சோதனை யுண்டாக்குவது என்பது அவனுக்குப் புது அநுபவமாயிருந்தது.

சிறிது நேரத்தில் முகம் கைகால்களை அலம்பிக்கொண்டு வெளியே வந்த பீதாம்பரம், அவசர அவசரமாக உடைகளை அணிந்து கொண்டு சுகுமாரனிடம் வந்தார். கடிதத்தையும் பத்திரிகைச் செய்தியையும் மாறிமாறிப் பார்த்த சுகுமாரனைக் கண்டதும் சிரிப்புத்தான் வந்தது அவருக்கு. "சுகுமாரா! இப்படி யெல்லாம் ஆராய்ந்தால் ஒன்றையும் கண்டு பிடிக்க முடியாது. பேசாமல் என்னுடன் வா" என்று அவன் கையைப் பிடித்துப் பரபரவென்று இழுத்துக்கொண்டு வெளியேறினார் பீதாம்பரம்.

சுகுமாரனுக்கு முன் தம் மனப் போராட்டங்களை பீதாம்பரம் காட்டிக்கொள்ளவில்லை யென்றாலும், அவர் இதயம் என்னவோ பெரிய பாரம் ஒன்றைச் சுமப்பது போல அழுந்தியது. கடிதமும்

பத்திரிகைச் செய்தியும் கூறுவதுபோல சம்பவம் நடந்து விட்டால் என்ன செய்வது? தெரிந்திருந்தும் குற்றம் நடக்க விட்டது மாபெரும் குற்றமாயிற்றே என்றெல்லாம் அவர் சிந்தனை ஓடியது.

போலீஸ் ஸ்டேஷனுக்குள் பீதாம்பரமும் சுகுமாரனும் நுழைந்து தங்கள் ஆசனங்களில் அமர்ந்தனர். இன்ஸ்பெக்டர் ஏகாம்பரம் அந்த நேரம் பார்த்தா வெளியே சென்றிருக்க வேண்டும்? பீதாம்பரத்துக்கு எல்லாம் சோதனைபோல பட்டது. இன்ஸ்பெக்டர் அங்கு இல்லாமற் போனது, அவரிடம் தம் அதிசயச் செய்தியை உடனடியாகச் சொல்ல முடியவில்லையே என்ற ஆற்றாமை, அதற்கும் மேலாக அவருக்குப் பிடித்தமான 'ஸ்டிராங் காபி' தயார்செய்து தரும் கருணா ஹோட்டல் சாத்தப் பட்டிருந்தது—எல்லாமாகச் சேர்ந்து அவரை ஒரு பெரிய சோதனைக்குள்ளாக்கிக் கொண்டிருந்தது.

"சுகுமாரா, எழுந்திரு. போய் எங்கேயாவது காபி சாப்பிட்டு விட்டு வரலாம். அதற்குள் இன்ஸ்பெக்டரும் வரட்டும்" என்று சொல்லிவிட்டு எழுந்து நின்றார் பீதாம்பரம்.

துப்பறியும் நிபுணர் பீதாம்பரத்தைத் தெரியாதவர்கள் போலீஸ் வட்டாரத்திலேயே இல்லையென்றுதான் சொல்ல வேண்டும். பூவுடன் சேர்ந்த நாரும் மணப்பது போல, துப்பறியும் துறையில் நாட்டமுள்ள இளைஞன் சுகுமாரன், அவருடைய உதவியாளனாகச் சேர்ந்திருப்பதால் அவனைப் பற்றியும் அநேகமாக எல்லோருக்கும் தெரியும். இருவருடைய திறமையையும் கதை கதையாகச் சொன்னால் கூடத் தீராது.

இன்ஸ்பெக்டர் ஏகாம்பரம் தம் இடத்தில் உட்கார்ந்து கொண்டு பீதாம்பரத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார். பத்திரிகையில் வந்த விளம்பரம் அவரையும் கூட ஒரு கலக்கு கலக்கி விட்டது என்றுதான் சொல்லவேண்டும். பீதாம்பரத்தைக் கண்டால் விவரம் புரியும் என்ற நினைப்பில் அவரை ஆவலுடன் எதிர்நோக்கிக் காண்டிருந்தார். சிறிது நேரத்தில் அங்கு வந்து சேர்ந்த பீதாம்பரம் ஒரேமூச்சில் தமக்குக்கிடைத்த கடிதத்தைப்பற்றியும் பத்திரிகை விளம்பரத்தைப்பற்றியும் சொல்லி முடித்தார். பிறகு எல்லோருமாக தங்கள் தங்கள கருத்துக்களைப் பறிமாறிக் கொண்டனர். கடைசியாக அன்று இரவு ஜார்ஜ் டவுனில் அநேகமாக எல்லா இடங்களிலும் போலீஸ் பாராவுக்கு ஏற்பாடு செய்வதென்றும், தாங்கள் மூவரும் ஸ்டேஷனிலேயே இருந்து கவனித்துக் கொண்டிருப்பதாகவும் முடிவு செய்தனர்.

பேசிப் பேசிப் பொழுதைக் கழித்துக் கொண்டிருந்தனர். முன்பே செய்த ஏற்பாட்டின்படி போலீஸ்காரர்களை அனுப்பிக் கொண்டிருந்தார் பீதாமபரம் குற்றம் நடக்கும் இடம் தெரிந்தால் இத்தனை தொந்தரவு இருக்காது. ஆகையால் யாருக்கு முதலில் என்ன தகவல் எட்டினாலும் உடனே அருகிலுள்ள டெலிபோன் மூலம் தமக்குச் செய்தி அனுப்ப வேண்டுமென ஒவ்வொரு போலீஸ்காரரிடமும் குறிப்பாகச் சொல்லியனுப்பினார் பீதாம்பரம்.

இத்தனை ஏற்பாடுகளையும் பரபரப்போடு செய்து கொண்டே வந்த பீதாம்பரத்துக்கு மனசு ஒரு நிலையிலில்லாமல் தவித்துக் கொண்டிருந்தது. பத்திரிகையில் விளமபரம் செய்திருப்பது போல இன்று இரவு ஓர் உயிர் கொலை செய்யப்பட்டுப பிரியப் போகிறது. அந்த உயிர் நீதியாகவோ அநீதியாகவோ போவதைப் பற்றி அவருக்குக் கவலையில்லை. ஆனால் சட்டம் என்ற ஒன்று ஒவ்வோர் உயிருக்கும் பாதுகாப்பளிக்கிறது. ஆயிரம் சாட்சிகளை விசாரணை செய்தும் திருப்தி வரவில்லை என்றால் அந்தச் சட்டம் ஓர் உயிரை வாங்க மறுத்து விடுகிறது. இப்படியிருக்கும்போது எவனோ ஒருவன் வெகு சுளுவில் ‘கொலை செய்யப் போகிறேன்’ என்று தெரிவிக்கிறான். அதற்கு நாம் தலை வணங்குவது போல இருக்கிறோமே என்ற எண்ணம் தான் பீதாம்பரத்தின் மனசில் குமைந்து கொண்டிருந்தது.

தெருக்களில் சந்தடி ஓய்ந்துவிட்டது. நடைபாதைகளில் படுத்துக் கொள்ளப்போட்டியிடும் கூலிக்காரர்களும் ரிக்ஷாக் காரர்களும் போடும் கூச்சல் தூரத்தில் சன்னமாகக் கேட்டுக் கொண்டிருந்தது. சிறிது நேரத்துக்கு ஒருமுறை காரோ, லாரியோ போவதைத் தவிர வேறு ஒரு சப்தமும் கேட்கவில்லை. சுகுமாரன், சுவரில் மாட்டப்பட்டிருந்த கடிகாரத்தைப் பார்த்தான். சரியாகப் பதினொன்றேகால் ஆகிவிட்டது. சிறிது நேரத்தில் விமானம் ஒன்று அவர்கள் தலைக்கு மேலே பறந்து சென்று அந்த வட்டாரத்தையே ஓர் ஆட்டு ஆட்டிவிட்டுச் சென்றது. இதற்குப் பிறகு முன்பிருந்ததை விட அதிகமாக நிலவியது அமைதி. இன்ஸ்பெக்டரும் துப்பறியும் நிபுணர்கள் இருவரும் ஒன்றுமே பேசிக் கொள்ளவில்லை; தலையைக் குனிந்து ஏதோ சிந்தித்த வண்ணமாயிருந்தனர். வெளியே காவல் நின்று கொண்டிருந்த சென்ட்ரி போலீஸ்காரன் அடிக்கொரு முறை காலை மாற்றுவது மட்டும ‘சரக்’ ‘சரக்’ என்று கேட்டுக்கொண்டிருந்தது. பாவம், இரவு எட்டு மணியிலிருந்து கையில் பிடித்த துப்பாக்கி

யோடு, நின்ற நிலையிலேயே அவன் நின்று கொண்டிருக்கிறான். கால் கடுத்து விடவே அடிக்கடி காலை மாற்றிக் கொள்ளுகிறான்.

மீண்டும் ஒருமுறை சுவரை ஏறிட்டுக் கடிகாரத்தைப் பார்த்தான் சுகுமாரன. மணி பதினொன்று ஐம்பத்தைந்து. சுகுமாரனின் மனம் படக் படக்கென்று அடித்துககொண்டது. இன்னும் பத்தே நிமிடங்கள்......பத்தே நிமிடங்கள். இதயத் துடிப்போடு பீதாம்பரத்தை நோக்கினான். அசப்பில் சுகுமாரனைப் பார்த்த பீதாம்பரம் 'சட்' என்று தம் கைக்கடிகாரத்தைப் பார்த்தார். பின்னர் விறுவிறு வென்று எழுந்து சென்று டெலிபோன் அருகில் உட்கார்ந்து கொண்டார். மீண்டும் அமைதி; சிந்தனை.

மணி பன்னிரண்டு அடித்தது. கனவிலிருந்து விடுபடுபவரைப் போல, இன்ஸ்பெக்டர் ஏகாம்பரம் சிலிர்த்து விட்டுக் கொண்டு சுற்றிலும் பார்த்தார். சுகுமாரன் கடிகாரத்தை வெறிக்கப் பார்த்துக்கொண்டிருந்தான். பெரிய முள் நகர நகர அவன் இதயம் வேகமாக அடித்துக் கொண்டிருந்தது. பீதாம்பரம் டெலிபோனையே வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்தார். இன்ஸ்பெக்டர், பிதாம்பரத்தின் அங்க அசைவுகளையே உன்னிப்பாகக் கவனித்துக்கொண்டிருந்தார்.

பன்னிரண்டு ஐந்து .... 'சரக்'கென்று சப்தம் கேட்டது. மூவருமே திடுக்கிட்டு விட்டனர். நல்ல வேளை! வெளியே நின்று கொண்டிருந்த போலீஸ்காரன் காலை மாற்றியிருக்கிறான். இப்போது உள்ளேயிருந்த மூவரும் டெலிபோனையே பார்த்துக் கொண்டிருந்தனர்.

திடுமென்று டெலிபோன் மணி அடிக்க ஆரம்பித்தது.

பரபரப்போடு ரிஸீவரைக் கையிலெடுத்தார் பீதாம்பரம். அவர் ஒன்றுமே பேசவில்லை. பேசுவதை மட்டும் கவனித்து விட்டு, போனைக் கீழே வைத்து விட்டு எழுந்து நின்றார். அவர் முகத்தை ஊடுருவி நோக்கினர் இன்ஸ்பெக்டரும் சுகுமாரனும்.

"டாக்டர் விமல நாதனை யாரோ கொலை செய்து விட்டார்களாம். அரண்மனைக்காரத் தெருவுக்கு ஓட்ட வேண்டும் காரை" என்று சுகுமாரனிடம் சொல்லிவிட்டு ஏகாம்பரத்துக்கு ஜாடை காட்டினார். மூவரும் அவசர அவசரமாகச் சென்று வெளியே நின்று கொண்டிருந்த போலீஸ்காரில் ஏறிக்கொண்டனர் கண்ணை மூடிக் கொண்டு காரைச் செலுத்தினான் சுகுமாரன்.

டாக்டர் விமலநாதனின் வீட்டுக்கு முன் வந்து நின்றது கார். வாசலில் நின்று கொண்டிருந்த மூன்று நான்கு போலீஸ்காரர்கள் இன்ஸ்பெக்டரையும் துப்பறிபவர்களையும் கண்டதும்

ஸலாம் வைத்து ஒதுங்கி நின்றனர். வாசலில் நடுத்தர வயது ஸ்திரீ ஒருத்தி நின்று கொண்டிருந்தாள். அவள் முகம பீதியால் பேயறைந்தது போலிருந்தது. அவளுக்குப் பின்னல் நின்று கொண்டிருந்த ஒருவர் பயந்து நடுங்கிக் கொண்டிருந்தார். பீதாம்பரம நேரே வீட்டுக்குள் சென்று, ஆபீஸ் அறைக்குள் நுழைந்தார். அங்கு, டாக்டர் விமலநாதன், தம் நறகாலியில் மல்லாந்து கிடந்தார் அவர் நெஞ்சிலிருந்து இரத்தம் கொட்டி உடையெல்லாம் சிவப்பு நிறமாக்கி விட்டிருந்தது. பிணத்தை ஒன்றுக்குப் பலமுறையாகக் கவனித்தார் பீதாம்பரம். இன்ஸ்பெக்டரும் சுகுமாரனும் அறையைச் சுற்றிப் பார்த்துக் கொண்டிருந்தனர்.

“ஸார்” என்று மெதுவாகக் கூப்பிட்டான் சுகுமாரன். அவனைத் திரும்பிப் பார்த்தார் பீதாம்பரம். அவன் சுட்டிக் காட்டிய ஜன்னலருகில் சென்று பார்த்தார். அங்கு காணப்பட்ட காட்சியைக் கண்டதும் அவருக்கு உடலெல்லாம் ஆடிவிட்டது. முழுக்க முழுக்க ரத்தத்தில் தோய்த்தெடுக்கப்பட்ட கத்தி ஒன்று ஜன்னல் பலகையில் குத்தி நிறுத்தப்பட்டிருந்தது. அதில் ஒரு சிறிய அட்டை நூலில் கட்டித் தொங்கவிடப்பட்டிருந்தது. அந்த அட்டையை மட்டும் பத்திரமாகப் பிடித்துப் படித்தார்.

**“வி-ரோ-தி-இந்தத் திட்டத்தில் முதல் கொலை”**

என்று ஆங்கிலத்தில் டைப் அடிக்கப்பட்டிருந்தது. நான் கைந்துமுறை அதையே திருமபத் திரும்பப் படித்தார் பீதாம்பரம். ஒரே ஆச்சரியமாயிருந்தது. இன்ஸ்பெக்டரையும் சுகுமாரனையும் அருகிலழைத்து அதைக் காட்டினார். அவர்களிருவரும் அதைப் படித்து விட்டு ஒன்றும் புரியாமல் திகைததனர்.

இருந்தாற்போலிருந்து சரேலென அறையை விட்டுவெளியே வந்தார் பீதாம்பரம். வாசலில் நின்று கொண்டிருந்த நடுத்தர வயது ஸ்திரீயை மட்டும் நடு ஹாலுக்குள் கூட்டிக் கொண்டு வந்தார்.

“நீங்கள் டாக்டருக்கு......” என்று கேள்வியை ஆரம்பித்தார் பீதாம்பரம்.

“உடன் பிறந்த தங்கை. நானும் என் கணவரும் இங்கே தானிருக்கிறோம்” என்று சட்டெனப் பதில் சொன்னாள் அந்த அம்மாள்.

“எவ்வளவு காலமாக?”

“எங்களுக்குக் கல்யாணமாகி இருபது வருடங்களாகியும் நாங்கள் என் அண்ணாவுடனேயே இருக்கிறோம்.”

"டாக்டரைக் கொன்றது யாரென்று தெரியுமா?"

"தெரியாது."

"அவருக்கு எதிரி என்று யாராவது உண்டா?"

"எனக்குத் தெரிந்தவரை அப்படி யாரும் கிடையாது."

"கொலை நடப்பதற்கு முன் வெளிக் கதவு சாத்தப்பட்டுத் தானே யிருந்தது?"

"இல்லை. அண்ணாதான் திறந்து போடச் சொன்னார். தாம், ஒருவருக்காகக் காத்துக் கொண்டிருப்பதாகவும், கதவைச் சாத்த வேண்டாமென்றும் சொல்லியிருந்தார்."

"டாக்டருக்கு மனைவி மக்கள்......?"

"மனைவி இறந்து ரொம்ப காலமாகிறது. மகன் அவருடன் இல்லை. தனியாக இருக்கிறான்"

"ஏன்?"

"தெரியாது."

நறுக்குத் தெறித்தாற்போல, 'உண்டு' 'இல்லை' என்று பதில் சொல்லிய டாக்டரின் தங்கையை ஏற இறங்கப் பார்த்து விட்டு வெளியே நின்று கொண்டிருந்த போலீஸ்காரனை அழைத்தார் பீதாம்பரம்.

"இந்த அம்மாளுடைய கணவர் வெளியே நிற்கிறார். இந்த அம்மாளை வெளியே நிறுத்தி விட்டு அவரை உள்ளே கொண்டு வா. இருவரையும் பேசவிடாதே" என்று அதிகாரத் தொனியில் கூறினார். பீதாம்பரம் சொல்லியபடியே செய்தான் போலீஸ்காரன்.

டாக்டரின் தங்கை கணவர் பீதாம்பரத்தின் முன்னால் வந்து நின்றார். அவரை உட்காரும்படி சொல்லி விட்டுக் கேள்வி கேட்க ஆரம்பித்தார் பீதாம்பரம்.

"நீங்கள் வேண்டுமென்று தானே கதவைத் திறந்து வைத்தீர்கள்?"

"எனக்கு ஒன்றும் தெரியாது. டாக்டர் பயங்கரமாகச் சத்தமிட்டபோதுதான் நான் திடுக்கிட்டு எழுந்தேன்."

"அது சரி......டாக்டரின் மகன் பெயரென்ன?"

"நாராயணன."

"தகப்பனுக்கும் பிள்ளைக்கும் எப்போதுமே ஆகாதோ?"

"ஆகாமல் போய்த்தான் இரண்டுபேரும் பிரிந்து ஏழு வருஷமாகி விட்டதே."

"நீங்கள் சொல்லிச் சமாதானப் படுத்துவதுதானே?"

"நன்ருய்ச் சொன்னீர்கள். ஆரம்பத்தில் ஒரு தடவை சொல்லிவிட்டு நான் பட்டபாடு எனக்கல்லவா தெரியும்? டாக்டருடைய உடன் பிறந்த தம்பி எவ்வளவோ சொல்லிப் பார்த்தான். கேட்கவில்லையென்ருல்......?"

"டாக்டருக்குத் தம்பி கூட இருக்கிருரா என்ன?"

"ஆமாம். என் மனைவிக்கு இளையவன். பெயர் கோபி."

"இவ்வளவு பெரிய டாக்டர்; கௌன்ஸிலராக வேறு இருக்கிருர். அவருக்கு எத்தனை தம்பி தங்கைகள் என்று கூட நான் தெரிந்து கொள்ளவில்லை யென்ருல், பார்த்துக் கொள்ளுங்களேன்!"

இருவரும் சிறிது நேரம் மௌனமாக இருந்தனர். இன்ஸ்பெக்டரும் சுகுமாரனும் பீதாம்பரம் இருந்த இடத்துக்கு வந்தனர். ஜன்னலில் குத்தியிருந்த இரத்தம் தோய்ந்த கத்தியை வெகு பத்திரமாக எடுத்துக் கையில் வைத்திருந்தார் ஏகாம்பரம்.

பீதாம்பரம் மீண்டும் தம் கேள்வியைத் துவக்கினுர்.

"இங்கு வேலைக்காரர்கள் யாருமே கிடையாதா?"

"இருக்கிருர்கள். அவர்கள் இரவில் தங்கள் வீடுகளுக்குச் சென்று விடுவார்கள்."

"எப்போதுமே அப்படியா? இல்லை......இரண்டொரு நாட்களுக்கு மட்டும் அப்படியா?"

"சமீப காலமாகத்தான். இரண்டு மாதத்துக்குமுன் வேலைக்காரர்கள் இரண்டு பேருமே இங்கே தான் ஜாகை வைத்திருந்தார்கள். இடநெருக்கடி காரணமாக டாக்டர் தான் அவர்களை வெளியில் தங்கும்படி சொன்னுர்."

"அது சரி......இங்கு யாரோ வரப்போகிருர்கள் என்று டாக்டர் எதிர்பார்த்துக் கொண்டிருந்தாராமே, அவர் யாரென்று உங்களுக்குத் தெரியுமா?"

இந்தக் கேள்வியைக் கேட்டு விட்டு டாக்டரின் மைத்துனரைக் கூர்ந்து நோக்கினுர் பீதாம்பரம். அவரிடமிருந்து பதிலே வரவில்லை. மாருக அவருடைய முகத்தில் ஏதோ புரிந்து கொள்ள முடியாத பீதி படர்ந்திருந்தது. இதைக் கவனித்து விட்ட பீதாம்பரம் மீண்டும் அதே கேள்வியைக் கேட்டார். சற்று நேரம் திகைத்துப் போயிருந்த அவரும் இரண்டாவது தடவையாகக் கேள்வி கேட்கப்பட்டவுடன் சமாளித்துக் கொண்டார்.

"எனக்குத் தெரியாது. ஆனால் அவர் யாரையோ எதிர் பார்த்துக் கொண்டிருந்தார் என்று மட்டும் என்னால் நம்ப முடிகிறது" என்றார்.

"எப்படி?"

"என் மனைவி பார்வதி அடிக்கடி அவருக்கு டீ தயாரித்துக் கொடுத்துக் கொண்டிருந்தாள். டாக்டர் இரவில் டீ சாப்பிட்டார் என்றால் இரவில் அதிக நேரம் விழித்துக் கொண்டிருக்கப் போகிறாரென்று எங்களுக்கெல்லாம் தெரியும்."

"அவரைப்பற்றி இவ்வளவு தெரிந்து வைத்துக்கொண்டிருக்கும் நீங்கள், அவர் யாருக்காகக் காத்துக் கொண்டிருந்தார் என்பதைக் கூடப் புரிந்து கொள்ள முடியுமே......" என்று இடையில் எதிர்பாராத இந்தக் கேள்வியைத் தூக்கிப் போட்டார்.

இப்போதும் அசந்து போய் விட்டார் டாக்டரின் மைத்துனர். அவருடைய நிலையைப் புரிந்து கொண்ட பீதாம்பரம், அவரைப் பார்த்து ஏளனமாகச் சிரித்தார்.

"ஒன்று சொல்லுகிறேன் மிஸ்டர். நீங்கள் உண்மையை மறைக்கலாம். ஆனால் பொய்யை மறைப்பது முடியவே முடியாத காரியம்" என்று கண்டிப்பாகக் கூறினார்.

இதைக் கேட்டதும் அவரை வெறித்துப் பார்த்த டாக்டரின் மைத்துனர் ஒன்றும் பதில் சொல்லவில்லை.

"இன்ஸ்பெக்டர் ஸார்! இவரையும் இவர் மனைவியையும் கைது செய்வதைத் தவிர வேறு வழியில்லை" என்றார் பீதாம்பரம்.

எல்லோருமாக வெளியே வந்தனர். இப்போது டாக்டரின் தங்கையிடம் வெகு பவ்யமாகக் கேட்டார் பீதாம்பரம்.

"உங்களுக்குத் தெரிந்த விஷயத்தை நீங்கள் இரண்டு பேருமே மறைக்கிறீர்கள். வெளிக் கதவை வேண்டுமென்று தானே திறந்து வைத்தீர்கள்?" என்று கேட்டார் பீதாம்பரம்.

அந்த அம்மாள் பயத்தால் வாய் உளறினாளே தவிர சரியான பதிலே சொல்லவில்லை.

இன்ஸ்பெக்டர், பீதாம்பரத்தை வேறொரு புறம் அழைத்துச் சென்றார். "டாக்டர் கத்தியால் குத்திக் கொலை செய்யப்பட்டிருக்கிறார். என்றாலும் எதிரி மிக அருகில் வந்து குத்திக் கொலை செய்யவில்லை. டாக்டரின் மார்பை நன்றாகக் கவனித்தேன். கத்தியை தொலைவிலிருந்து வீசி யெறிந்து கொன்

திருக்கிறார்கள். பிறகு நெஞ்சிலிருந்து கத்தி பிடுங்கப்பட்டிருக்கிறது. காயத்தின் சாயலைப் பார்த்தால் அப்படித்தான் தோன்றுகிறது" என்று சொன்னார். பீதாம்பரம் அந்தக் கத்தியை வாங்கி மீண்டும் ஒரு முறை பார்த்தார். அது ஒரு சாதாரண சூரிக் கத்தி. மட்டமான மரம் ஒன்றினால் கைப்பிடியுள்ள அந்த மாதிரிக் கத்திகள் திருவிதாங்கூர்ப்பக்கம் ஏராளம் உண்டு. மலையாளத்துப் பெண்கள் காய்கறி நறுக்கக்கூட அப்படி ஒரு சூரிக் கத்தியைத் தான் உபயோகிபபார்கள்.

கத்தியை இன்ஸ்பெக்டரிடமே கொடுத்துவிட்டுக் காரை நோக்கி விரைந்தார் பீதாம்பரம். டாக்டரின் தங்கையையும் அவள் கணவரையும் ஏற்றிக்கொண்டு கிளம்பியது கார்.

## 2. மாயா ஹோட்டலில் நடந்த மாயம்

கிணுங் கிணுங்கென்று டெலிபோன் மணி அலறியது. பீதாம்பரம் விரைந்து சென்று ரிஸீவரைக் கையிலெடுத்தார்.

"ஆமாம்! பீதாம்பரம் தான் பேசுகிறேன்" என்று சொல்லிவிட்டு மறுபுறமிருந்து பேசப்படுவதைக் கவனமாகக் கேட்டார். பிறகு போனைக் கீழே வைத்தார்.

சிறிது நேரத்தில் சுகுமாரன் ஓர் ஆளுடன் பீதாம்பரத்தை நோக்கி வந்தான்.

"ஸார்! இவர் டாக்டர் விமலநாதனின் சகோதரர் கோபி. உங்களைப் பார்க்கவேண்டுமென்று வந்திருக்கிறார்" என்றான். வந்தவரை உட்காரச் சொல்லிவிட்டு, அவரை எடைபோடுவது போல ஊடுருவிப் பார்த்தார் பீதாம்பரம்.

புதியவர் தாமே பேச்சை ஆரம்பித்தார். "நான் டாக்டர் விமலநாதனின் தம்பி......"

"அதைத்தான் சுகுமாரன் சொல்லிவிட்டானே!"

"என் சகோதரர் கொலை செய்யப்பட்ட விவரம் இப்போது தான் தெரிந்தது."

"புதிதாக ஏதேனும் சொல்லப்போகிறீர்களா இப்போது?"

"இல்லை......இல்லை. என் சகோதரியையும் அவள் கணவரையும்.........."

"ஜாமீனில் விடுவதற்கு உண்டான வகையில் அவர்களுக்கு நடந்து கொள்ளத் தெரியவில்லையே ஐயா!"

"அப்படியானல்......?"

"அதைப்பிறகு பார்த்துக்கொள்ளுவோம். உடன்பிறந்த நீங்கள் வந்து விட்டீர்கள். ஆனல் டாக்டர் விமலநாதனின் பெற்றமகன் இன்னும் வரவில்லையே. பெரிய ஆச்சரியமதான்."

"அவன் விசாரம் அவனுக்கு. உண்மையைச் சொல்லுகிறேன். நாராயணன் இப்போது இருக்கும் நிலைமையைப் பார்த்தால் அவனை டாக்டர் விமலநாதனின் பிள்ளை என்று யாருமே சொல்லமாட்டார்கள். குடிக்கக் கஞ்சிகுக்கூட வழி இல்லாமல் பெண்டாட்டி பிள்ளைகளோடு அவன் படுகிற அவதி சொல்லி முடியாது. வேலையில்லாமல் ரொம்பக் கஷ்டப்படுகிருன். அவன் செய்த தப்பெல்லாம் இதுதான். அவர்கள் வீட்டில் வேலைக்காரியாக இருந்த பெண்ணை மனம் விரும்பி மணம் செய்து கொண்டான். தம அந்தஸ்துக்குக் கீழான அந்தப் பெண்ணை மணக்கக்கூடாது என்று என் சகோதரர் எவ்வளவோ பிடிவாதமாகச்சொன்னுர். அவர் பெற்ற பிள்ளையல்லவா நாராயணன். அவருக்குமேல்பிடிவாதமாக அந்தவேலைக்காரப்பெண்ணைத்தான் கல்யாணம் செய்வேன் என்று சாதித்துவிட்டான். சொன்னபடியே செய்தும் விட்டான். இதனல் தந்தைக்கும் மகனுக்கும் மனக்கசப்பு ஏற்பட்டுப் பிரியும்படி நேர்ந்துவிட்டது. நான்மட்டும் அந்த நேரத்தில் இருந்திருப்பேனுனல் இவ்வளவு தூரத்துக்கு நடக்கவிட்டிருக்கமாட்டேன்."

"அப்படியானல் இந்தத் தகராறு நடந்த போதெல்லாம் நீங்கள் இங்கு இல்லையா?"

"இல்லை. நான் ஒரு சர்க்கஸ் கம்பெனி வைத்து நடத்திக் கொண்டிருந்தேன்.கம்பெனியைமூடி இரண்டு வருடங்களாகிறது இந்த இரண்டு வருடங்களாகத்தான் இங்கு இருக்கிறேன். நாராயணனின் நிலைமையை விளக்கி என் சகோதரருக்கு எத்தனையோ முறை சொல்லிவிட்டேன். அவர் நான் சொன்ன எதையும் காதில் போட்டுக்கொள்ளவில்லை."

"நீங்கள் தனியாகத்தான் இருக்கிறீர்கள்; இல்லையா?"

"ஆமாம். கையில் வைத்திருக்கும் பணம் கரைவதற்குள் ஏதாவது தொழில் நடத்தலாமென்றிருக்கிறேன். உங்களிடம் நான் சொல்ல வந்தது என்னவென்ருல்,நாராயணன் வறுமையால் நொந்துபோய்க்கிடக்கிருன்; இந்த நேரத்தில் தகப்பனர்கொலை சம்பந்தமாக அவனை ஏதாவது செய்யவேண்டாமென்று உங்களிடம் சொல்லத்தான். நாராயணன் அப்படிப்பட்ட பிள்ளை இல்லை. அண்ணன் மகன் என்ற பாசத்தில் சொல்லுகிறேன்

என்று தப்பாக நினைத்துக் கொள்ளக்கூடாது. நாராயணன் உத்தமன் என்று எனக்குத் தெரியும். தந்தை மேலுள்ள கோபத்தை இவ்விதம் அவன் தீர்த்துக்கொள்ள விரும்பியிருந் தால் இதற்கு முன் எத்தனையோ சந்தர்ப்பங்கள் வாய்த்திருக் கின்றன. அப்போதெல்லாம் செய்யாதவன் இப்போது போயா செய்யப்போகிறான் ?" என்று நிறுத்தினார் கோபி.

"உங்களை நான் மறுபடியும் எப்போது எங்கே பார்க்க முடியுமென்று சொல்லமுடியுமா?" என்று வினயமாகக்கேட்டார் பீதாம்பரம்.

கோபி, தம் விலாசத்தை எழுதிக்கொடுத்துவிட்டு, "உங் களுக்கு ஒழிந்த வேளையில் என்னைக் கூப்பிட்டு அனுப்புங்கள். அவசியம் வருகிறேன். என் சகோதரரைக் கொன்றவர்களை நிச்சயம் கண்டுபிடிப்பீர்கள் என்ற நம்பிக்கை எனக்கிருக்கிறது" என்று சொன்னார்.

"நாராயணன் விலாசத்தைக் கொஞ்சம் கொடுக்கிறீர்களா?" என்று கேட்டார் பீதாம்பரம்.

"நாராயணனை நீங்கள் தொந்தரவு செய்யக்கூடாது என்று சொல்லிவிட்டுப் போகத்தானே முக்கியமாக வந்தேன். என்னி டமே அவன் விலாசத்தைக் கேட்கிறீர்களே?" என்று மலைப் போடு கூறினார் கோபி.

"மடியில் கனமிருந்தால் தானே வழியில் பயம்? நாராயணன் நல்லவனாயிருக்கும்போது அவனைத்தொந்தரவு செய்யவேண்டு மென்று எங்களுக்கு என்ன வந்துவிட்டது? நாராயணன் மூல மாக ஏதாவது துப்புக் கிடைக்கிறதா என்று முயற்சி செய்யத் தான் விலாசம் கேட்டேன்" என்று நாஸூக்காகப் பேசினார் பீதாம்பரம்.

ஒன்றும் சொல்லமுடியாமற்போகவே நாராயணனின் விலா சத்தை எழுதிக்கொடுத்துவிட்டு வெளியேறினார் கோபி. இதற் குள் சுகுமாரன் உள்ளே நுழைந்தான். கோபி அப்போது தான் வாசலைக் கடந்து கொண்டிருந்தார்.

"சுகுமாரா! நாம் இப்போது ஹோட்டல் மாயாவுக்குச் செல்லவேண்டும். சுருக்கெழுத்து எடுப்பதற்கான பென்ஸில் நோட்டையெல்லாம் எடுத்துக்கொள்" என்றார் பீதாம்பரம்.

நகருக்குக் கிழக்கே கடற்கரையோரமாக அமைக்கப் பட்டிருந்த "ஹோட்டல் மாயா" முற்றும் நாகரிக மானது. ஆடம்பரத்தை விரும்புபவர்கள் தான் அநேகமாக

அங்கு செல்லுவார்கள். யாரேனும் வழி தப்பி வந்து தொண்டையை நனைத்துக்கொள்ள ஒரு 'கப' காபி சாப்பிடுவோமே என்று உள்ளே நுழைந்தால் ஆபத்துதான். முன்பின் அந்த ஹோட்டலைப்பற்றித் தெரியாதவர், சாதாரண காபிக்கு ஆறணு என்றால் அதிர்ச்சியடையத்தானே செய்வார்?

மேனாட்டு முறையை அப்படியே பின்பற்றி நடந்து கொண்டிருந்த ஹோட்டல் மாயாவுக்குள் அடியெடுத்து வைத்தனர் துப்பறியும் நிபுணர்கள் இருவரும். நேராக மானேஜரிடம் சென்று வைத்தியநாதன் என்பவரைப் பார்க்கவேண்டுமென்று சொல்லிவிட்டுத்தங்களையும் அறிமுகப்படுத்திக்கொண்டனர். சாப்பிட வருபவர்கள் அமரும் ஓர் இடத்தைச் சுட்டிக்காட்டி அங்கு அமருமாறு சொல்லிவிட்டு, கிளார்க் வைத்தியநாதனை அழைத்துவருவதற்கு ஓர் ஆளை அனுப்பினுர் ஹோட்டல் மானேஜர். சிறிது நேரத்தில் வைத்தியநாதன் வந்தார். பீதாம்பரம் அவரிடம் எழுந்து சென்று தம்மை அறிமுகம் செய்து கொண்டார். வைத்தியநாதனும் அவர்களோடு ஒரு நாற்காலியில் உட்கார்ந்து கொண்டார். சுற்றுமுற்றும் பார்த்துவிட்டு எதையோ பேச வாயெடுத்தார். அவ்வளவுதான்! யாருமே எதிர்பார்க்காதபடி 'சரக்' கென்று ஒரு கத்தி பாய்ந்து வந்து வைத்தியநாதனின் மார்பில் புதைந்தது. சட்டென்று குனிந்து மார்பை அழுத்திப்பிடித்தார் வைத்தியநாதன். அவரைக்கவனிப்பதிலேயே இருந்துவிட்ட பீதாம்பரம், கத்தி எங்கிருந்து வந்தது, எப்படிப்பாய்ந்தது என்று நினைத்துப்பார்க்கவேயில்லை. கணணை மூடித் திறப்பதற்குள் நடந்துவிட்ட இந்தச்சம்பவம், சுகுமாரனையும் எதையும் கவனிக்கவிடாமல் சிலையாக்கிவிட்டது. ஹோட்டலிலிருந்த அத்தனை பேரும் வைத்தியநாதனைச் சூழ்ந்து கொண்டார்கள். அவர் உயிரற்ற பிணமாய்க் கீழே சாய்ந்தார். சுற்றிலும் ஒரே ரத்தம் வெள்ளமாய்க்காட்சியளித்தது.

பீதாம்பரம் எழுந்து மானேஜாருகில் சென்ருர். இன்ஸ்பெக்டர் ஏகாம்பரத்துக்கு போன் செய்தார். பத்து நிமிடங்களுக்கெல்லாம் திபுதிபு வென்று போலீஸ்காரர்கள் கூடிவிட்டனர். ஹோட்டலைப் பூராவும் வலைபோட்டு அரித்தனர். மாடிப்படிகளில் மறைந்து நின்று கத்தியை வீசியிருக்கலாமென்று நினைத்து, மாடியெல்லாம் தேடினுர்கள். யாருமே இல்லை அங்கு. பீதாம்பரத்துக்கு ஒரு சந்தேகம். கொலையாளி கூட்டத்தோடுகூட்டமாகத் தானும் நின்றுகொண்டு ஏமாற்றுகிருஞ என்பதே அவர் சந்தேகம். ஆகவே அவர் சற்று எட்ட நின்று கொண்டு எல்லோரையும் நன்ருகக் கவனித்தார். எந்த முகத்தையும்

அவரால் சந்தேகிக்க முடியவில்லை. இதற்குள் இன்ஸ்பெக்டர் ஏகாம்பரமும் வந்துசேர்ந்துவிட்டார்.

"இன்னும் எத்தனையோ கொலைகள் நடக்க இருந்ததைத் தடை செயயும் நோககத்துடன் நம்மை அணுகிய வைத்திய நாதன் அவர் உயிருக்கே முடிவைத்தேடிக்கொணடார்" என்று துக்கத்தோடு ஏகாம்பரத்திடம் கூறினர் பீதாம்பரம்.

இன்ஸ்பெக்டர் ஒன்றும் பேசவில்லை.

"எனக்கே பெரிய ஆச்சரியமாயிருக்கிறது. அந்தக் கத்தி எப்படி அவ்வளவு லாகவமாக வந்தது என்று இப்போது கூட நினைத்துப் பார்க்கிறேன். எனனல் கறபனை கூடச் செய்யமுடியவில்லை. இந்த நேரத்தில் இங்குவந்தால் குற்ற வாளியைப் பிடித்துத்தருவதாக வைத்தியநாதன் எனக்கு போன் பண்ணினர். மிகப்பெரிய நம்பிக்கையோடு இங்கே வந்தேன். ஆனல் எதிர்பாராதது நடந்துவிட்டது. வைத்திய நாதன் சொன்னதிலிருந்து கொலைகாரன் இந்த ஹோட்டலிலேயே ஏன் இருக்கக்கூடாது என்று கூட எண்ணத் தோன்றுகிறது" என்று பேசிக்கொண்டேபோன பீதாம்பரத்துக்கு ஒரு சந்தேகம் வந்தது. விறுவிறுவென்று வைத்தியநாதன் பிணமாகக்கிடந்த இடத்துக்குச் சென்று கூட்டத்தை விலக்கிக்கொண்டு அவர் மார்பில் புதைந்திருநத கத்தியைக் கவனித்தார். இரவு டாக்டர் விமலநாதனைக்கொன்றது போன்ற கத்தி தான் வைத்திய நாதனையும் பலி வாங்கிவிட்டது. ஆனல் ஒரு வித்தியாசம். கத்தியில் கட்டப்பட்டிருந்த அட்டை இங்கு இல்லை. அப்படி யானல்......?

கடிதத்தில் தெரிவித்தார்களே, பீதாம்பரத்தின் தலையீடு அதிகரித்தால், திட்டமிடப்பட்ட கொலைகளைவிட அதிகமாக நடக்குமென்று—அதில் வைத்தியநாதன் கொலையும் ஒன்ருயிருக் குமோ......?—அதை நினைக்கவே பீதாம்பரத்தின் உடலெல்லாம் நடுங்கியது. அவருக்கு என்னவோ ஒரு சந்தேகம் உறுத்திக் கொண்டிருந்தது. ஓர் ஆள் கொலைகாரனைக் கண்டுபிடித்துத் தருவதாகக் கூறினர். அவருக்கு உண்மையில் கொலையாளியைத் தெரியுமென்று நிச்சயமாக நம்பமுடிகிறது. உண்மையிலேயே ஒரு கொலைகாரன் இருக்கப்போய்த்தானே தகவல் கொடுக்க வந்த வைத்தியநாதனுடைய உயிர்போயிற்று? அவன் இந்த ஹோட்டல் சிப்பந்திகளில் ஒருவனுக ஏன் இருக்கக்கூடாது?

பலவாருகச் சிந்தித்துவிட்ட பீதாம்பரம் ஒரு முடிவும் காணு மல் தம் ஆசனத்தை விட்டு எழுந்தார். ஒரேயடியாக யோசனை யிலேயே இருந்துவிட்டதால் தலை பாரமாகக் கனத்தது. ஒன்றும்

பேசாமல் ஹோட்டலைவிட்டு வெளியேறினர். சுகுமாரனும் இன்ஸ்பெக்டரும் அவரைப் பின் தொடர்ந்தனர்.

“மிஸ்டர் ஏகாம்பரம்! நீங்கள் இன்னும் கொஞ்சநேரத்துக்கு இங்கேயே இருக்கவேண்டும. நாலைந்து ஜவான்களை, மாற்றுடையில், இந்த ஹோட்டல் சிப்பந்திகள், வருவோர் போவோர் எல்லோரையும் கண்காணிக்கச் சொல்லுங்கள். நீங்களும் சிறிது நேரத்தில் ஸ்டேஷனுக்குச் செல்லுங்கள். டாக்டர் விமலநாதனின் மகன் நாராயணனைப்பார்க்கச் செல்லுகிறோம். அவனைப் பிடித்தால் ஏதாவது தகவல் கிடைக்குமென்று நம்புகிறேன். முக்கியமான விஷயமானல் உங்களுக்கு போன் செய்கிறேன். எதற்கும் நீங்கள் இன்னும் கால்மணி நேரத்தில் ஸ்டேஷனிலிருப்பது நல்லது” என்று சொல்லிவிட்டு விறுவிறுவென்று நடந்து சென்று ஜீப்பில் ஏறிக் கொண்டார். முடுக்கிவிட்ட இயந்திரம் போல அவரைப்பின தொடர்ந்து சென்று சுகுமாரனும் காரில் ஏறினன். காரை ஸ்டார்ட் செய்தார் பீதாம்பரம.

‘படக்’ கென்று, திறந்தகாரின் நடுவில் அம்புபோல ஏதோ ஒருபொருள் வந்து விழுந்தது. காருக்குப் பின்னலிருந்தே வந்தது அந்தப்பொருள். விறுட்டென்று திரும்பிப்பார்த்தார் பீதாமபரம். அதுஹோட்டலுக்குள்ளிருந்துவந்ததா, ஹோட்டல் மாடியிலிருந்து வந்ததா என்று புரியவில்லை. ஹோட்டலுக்கு வெளியேயிருந்து வருவதற்கு அவசியமேயில்லை. திறந்த வெளியில் நின்று கொண்டு குறி பார்த்து அந்தப்பொருளை எறிய வேண்டுமானல் ஆளை எளிதில் கண்டு கொள்ளலாம். யாரையும் காணேம் முன்னல் குனிந்து அந்தப் பொருளைக் கையிலெடுத்தார். ஏதோ தின்பண்டத்தைச் சுருட்டியிருப்பது போல ஒரு பொட்டலமாக அது காட்சியளித்தது. கையிலெடுக்கச் சற்று கனமாகவேயிருந்தது. முகத்துக்குச் சிறிது எட்டவே அதை வைத்துக்கொண்டு பார்த்தார். இமமாதிரிதான் ஒருதடவை கைவெடிகுண்டு ஒன்றை வைத்து அவரருகில் யாரோ போட்டுவிட்டனர். எடுத்துப்பிரித்துப் பார்க்கையில் குண்டு ‘டமா ரெ’ன்று வெடிததுவிட்டது. நல்ல வேளையாக பீதாம்பரம் ஒரு மயிரிழையில் தப்பினர். இப்போதும் அம்மாதிரி ஏதாவது அசம்பாவிதம நிகழ்ந்து விடக்கூடாதே என்றுதான, காருக்குள் வந்து விழுந்த பொட்டலத்தைச் சற்று தூரத்தில் பிடித்துக் கொண்டே பிரித்தார். ஆனல் அந்தப்பொட்டலம் அவரை ஒரேயடியாக ஏமாற்றிவிட்டது. உள்ளே ஒரு கல் மட்டுமேயிருந்தது. அதைப்பார்த்ததும் சுகுமாரனுக்குச் சிரிப்பு வந்துவிட்டது. கல்லை இப்படியும அப்படியுமாக இரண்டு மூன்று முறை

புரட்டிப்பார்த்து விட்டு அதைச்சுற்றியிருந்த காகிதத்தைப் பார்த்தார். அதில்தான் அந்தப்பொட்டலம் வீசியெறியப் பட்டதன் நோக்கமே புதைந்துகிடந்தது; காகிதத்தைச் சுகு மாரனிடம் காட்டினார். இக்கடிதம் கையால் நிறுத்தி, அழகாக எழுதப்பட்டிருந்தது.

> "உங்களை என்னவோ பெரிய துப்பறியும் புலி யென்று நினைத்திருந்தேன். ஆனால் அந்த எண்ணத்தை மாற்றிக் கொள்ளவேண்டியதாகி விட்டது. இன்று மாலைப் பத்திரிகையைப் பாருங்கள்
>
> வி—ரோ—தி"

இதைப்படித்து விட்டுப் பீதாம்பரத்தை நோக்கினான் சுகு மாரன். அவர் முகத்தில் ஒரு பிரகாசம் தெறித்தது.

"சுகுமார்! இத்தனை அமர்க்களம் பண்ணிவிட்டோமே, ஒரே ஒரு விஷயத்தை யோசித்தோமா? துணிச்சலோடு பத்திரிகையில் விளம்பரம் செய்திருக்கிறான் கொலையாளி. அவர் களும என்னமோ ஏதோ என்று பத்திரிகையில் பிரசுரித்து விட்டனர். பத்திரிகை ஆபீஸில் அவன் எழுதிய கடிதமோ விளம்பர மூலமோ இருக்குமல்லவா? அதை வைத்துக் கொண்டு வழக்கை ஆராய முயற்சிக்கலாம். பிறகு நாராயணனைக் கண்டு விசாரிக்க வசதியாயிருக்கும்" என்று சொல்லிவிட்டுக் காரை 'ஒடித்து' எதிர்த்திசையில் திருப்பினார்.

பீதாம்பரத்தின் அபிப்பிராயங்களுக்கு எந்த வித பதிலும் சொல்லாமலே எதை எதையோ யோசித்துக்கொண்டு உட்கார்ந் திருந்தான் சுகுமாரன். 'மாலைச் செய்தி' பத்திரிகை ஆபீஸ் முன் கார் வந்து நின்று, பீதாமபரம் இறங்கிய பிறகுதான அவ னுக்கு உணர்வு வந்தது. விறு விறுவென்று இறங்கி பீதாம் பரத்துடன் பத்திரிகை ஆபீஸுக்குள் நுழைந்தான்.

துப்பறியும் நிபுணர்கள் இருவரும் எதை நம்பி ஓடிவந்தார்-களோ அது இல்லையென்று, விளம்பர அதிகாரி கையை விரித்து விட்டால் அவர்களுக்கு எப்படி யிருக்கும்?

"டைப் அடித்த கடிதம் தான் அது. அதனுடன் ஐந்து ரூபாய் நோட்டும் விளம்பர சார்ஜ் என்று வைக்கபபட்டிருந்தது. உதவி ஆசிரியரிடம் கொடுத்து அதை மொழிபெயர்க்கச் சொன் னேன். தெரியாதா பத்திரிகை ஆபீஸ் குப்பையைப் பற்றி? அந்தக்குப்பையில் எங்கேயோ போட்டுவிட்டார் உதவி ஆசிரியர்.

எங்கள் பத்திரிகையில் விளம்பரம் செய்து கொலை நடந்திருப்ப தாகச் செய்தியைப்பார்த்த பிறகு நாங்களே அந்த விளம்பரத் தாளைத் தேடிப்பார்த்தோம். கிடைக்கவில்லை" என்று உதட் டைப் பிதுக்கிக் கொண்டே சொன்னார் விளம்பர அதிகாரி.

"உங்கள் பத்திரிகைக்கு மாலைப் பதிப்பு உண்டா?" என்று வேறொரு கேள்வியைக் கேட்டார் பீதாமபரம்.

"பத்திரிகையின் பெயரே 'காலைச் செய்தி' யாயிற்றே! மாலைப்பதிபபு எப்படி ஸார் போடுகிறது?" என்று அந்தநேரம் பார்த்து ஹாஸ்யம் பேசினார் விளம்பர மானேஜர். பீதாம்பரத் துக்குப் பற்றிக் கொண்டுவந்தது. இருந்தாலும் காரியத்தைச் சாதிக்கவேண்டி ஆத்திரத்தை அடக்கிக் கொண்டு, "அதற் கில்லை. இந்தமார்திரி மீண்டும் ஏதாவது விளம்பரம் வந்தபொதன் றால் எனக்கு உடனே அனுப்புங்கள். பிரசுரம் செய்த பிறகு தான் அது அப்படிப்பட்ட கடிதம் என்று உங்களுக்குத் தெரியப் போகிறது. இருந்தாலும் முந்திய கடிதத்தைப்போல இதையும் தொலைத்து விடக்கூடாதே என்று முன்னதாகவே சொல்லி வைக்கிறேன்" என்று அசட்டுத்தனமாகச் சிரித்துக் கொண்டே சொல்லிவிட்டு வெளியேறினார் பீதாம்பரம்.

"ஸார்! எனக்கென்னமோ இந்தப் பத்திரிகை மேலேயே சந்தேகம் வருகிறது. இவர்களும் என் கொலைக்கு உடந்தையாக இருக்கக்கூடாது?" என்று சந்தேகத்தோடு கூறினான் சுகுமாரன்.

"நீ சொல்லுவது சரிதான் சுகுமாரா! இவர்கள் மீதும் சந்தேகப்படலாம, கைது செய்யலாம், வழக்குத் தொடரலாம். ஆனால் ஒரு சிறிய ஆதாரமாவது வேண்டாமா?" என்றார் பீதாம் பரம். சுகுமாரன் மௌனமாகயிருந்து விட்டான்.

"இப்போது நாம் நாராயணன் வீட்டுக்குச் செல்லுகிறோம் தெரிகிறதா?" என்று கிண்டலாக சுகுமாரனின் காதுக்கு மிக அருகில் வந்து இரைந்து சொல்லிவிட்டு காரை ஸ்டார்ட் செய் தார் பீதாம்பரம்!

## 3. இரண்டாவது விளம்பரம்

துப்பறியும் நிபுணர்கள் இருவரும் டாக்டர் விமலநாதனின் தம்பி கோபி கொடுத்த விலாசப்படி ஆலந்தூருக்குள் புகுந்து பொன்னியம்மன் கோயில் தெருவை நெருங்கிவிட்டனர். மணி நாலு ஆகிவிட்டது. கோபி சொல்லிய விவரப்படியே தெருக்

கோடியில் ஒரு சிறிய கூரை வீடு இருந்தது. வீட்டைச்சுற்றி ஓலை நிறைசல் கட்டப்பட்டிருந்தது. முன்னுல் நின்று கொண்டிருந்த ஒரு மொட்டை வண்டிக்குக் கீழே இரண்டு மூன்று சிறு குழந்தைகள் விளையாடிக் கொண்டிருந்தனர் அவர்களின் 'பெரிய இடத்து' முகத்தோற்றத்தைக் கொண்டே, நாராயணனின் குழந்தைகள் தானென்று முடிவு செய்து கொண்டார் பீதாம்பரம்.

கார் தங்கள் வீட்டுக்கு முன்னுல்வந்து நிற்கவே வண்டிக்குக் கீழே விளையாடிக் கொண்டிருந்த குழந்தைகள் காரின் அருகில் ஓடிவந்தன. அவர்களின் தோற்றங்களைக் கண்டதும் சுகுமாரனுக்கு மனம் இளகிவிட்டது. அறையில் ஒன்றுமில்லாமல் பீத்தல் சட்டைகளை அணிந்து கொண்டு கவலையற்று அவர்கள் விளையாடிக் கொண்டிருந்தாலும் ஏழ்மையின் கோர ரேகைகள் அந்தப்பிஞ்சு முகங்களில் பதியாமலில்லை.

"அப்பா இருக்கிருரா?" என்று மூத்த பையனிடம் விசாரித்தார் பீதாமபரம்.

"இல்லையே, அம்மா இருக்காங்க, கூப்பிடட்டுமா?" என்று பதிலளித்தான் அந்தச் சிறுவன். இதற்குள் உள்ளேயிருந்து ஒரு பெண் ஓலைக் கதவைத்திறந்து கொண்டு வெளியே எட்டிப் பார்த்தாள் பீதாம்பரம் ஒன்றும் பேசாமல் வாசலை நோக்கி நடந்து வீட்டுக்குள் சென்ருர்.

வெகு சாதாரணமாக, "நாராயணன் இல்லையா?" என்று அந்தப்பெண்ணைக்கேட்டார்.

"இல்லை, வெளியே போயிருக்கிருர்" என்று நிதானமாகவே பதிலளித்தாள் அவள். அவளுடைய முகத்தில் விவரிக்கமுடியாத சோகம் படர்ந்திருந்தது. குரலும் துக்கத்தால் குறைந்துவிட்டிருந்தது. பாதிக் கந்தலான புடவையும் சாதாரணச் சீட்டிததுணிச் சட்டையும் அவள் பஞ்சைக் கோலத்தை அணி செய்து கொண்டிருந்தன.

"எங்கே போயிருக்கிருர் என்று தெரியுமா?" என்று கேட்டார் பீதாம்பரம்.

"ஏதாவது வேலைகிடைக்கிறதா என்று பார்க்கத்தான் போயிருப்பார்."

"அப்படியாஞல் அவர் எந்த இடத்துக்குத்தான் போயிருப்பார் என்று உங்களுக்குத் தெரியாது?"

"நீங்கள் யார் என்று எனக்குத் தெரியவில்லையே ?" என்று சந்தேகப் பார்வையில் பீதாம்பரத்தை நோக்கிக் கேட்டாள் அவள்.

தம்முடைய கேள்விக்கு அவள் பதில் சொல்லாமல் வேறு ஏதோ கேள்வியைத் தம்மிடமே அவள் கேட்டதும் பீதாம்பரத்துக்கு ஏதோ ஒரு சந்தேகம் தோனறிவிட்டது.

"நான் கேட்டதற்குத் தான் உன்னிடம் பதிலை எதிர்பார்க்கிறேன் அம்மா" என்று சற்று கடுமையாகவே பேசினர்.

"உங்களுக்கு நான் பதில் சொல்லித்தான் ஆகவேண்டுமென்று என்ன வந்துவிட்டது ?" என்று வெடுக்கென்று கேட்டுவிட்டாள்.

நிலைமை மோசமாகிவிடுமென்று பயந்துவிட்ட சுகுமாரன், "உங்கள மாமனர் கொலை செய்யப்பட்டது சம்பந்தமாக விசாரிக்கத்தான் வந்திருக்கிறோம்" என்றுன்.

கொலை பற்றிய விசாரணை என்றதும் அந்தப் பெண்ணின் கண்கள் ஏனே மருண்டன. பீதியோடு எதிரே நின்று கொண்டிருந்த இரு ஆண்களையும பார்த்தாள். ஆனல் மறு கணமே அவள் முகத்தில் ஓர் அதிசய மாற்றம் ஏற்பட்டது.

"அதனுலென்ன? எங்களிடம் வந்து விசாரிக்க வேண்டியது, என்ன இருக்கிறது? அந்தப் பணம் காத்த பிசாசு செத்ததிலே ஒன்றும் நஷ்டம் வந்து விடவில்லை" என்று ஆத்திரத்தோடு பேசினுள் அவள்.

"உனக்கு ஆயிரம் கோபம் வரலாம் அம்மா. ஆனுல் நாங்கள் எங்கள் கடமையைச் செய்ய வேண்டுமே" என்றுர் பீதாம்பரம்.

"நன்ருக விசாரியுங்கள். எங்களுக்கும் அவர் கொலைக்கும் ஒரு சம்பந்தமும் கிடையாது. **அவர்** கூட காலையில் தான் வெளியே புறப்பட்டுப் போனர். சாயங்காலமாக எதற்கும் வந்து பாருங்கள்".

"உன் பெயர் என்னம்மா ?"

"கல்யாணி."

"உன் மாமாவுக்கு யாராவது விரோதிகள் உண்டா ?"

"மனிதர்கள் மட்டும்தான அந்தப் பாவிக்கு விரோதி ? கடவுளே ஜென்ம விரோதியாயிற்றே. என்னைப் பாருங்கள், என் குழந்தைகளைப் பாருங்கள். பெரிய டாக்டர், லக்ஷாதிபதியின் மருமகளும் பேரக் குழந்தைகளுமாகவா நாங்கள் இருக்கிறோம் ?" என்று பட படவெனப் பேசி விட்டு, பீதாம்பரத்தையே வெறித்து

நோக்கிய கல்யாணியின் கண்களிலிருந்து பொல பொலவென்று கண்ணீர் பொங்கி வழிந்தது.

"நீங்கள் போய் அவரிடம் சொல்லியிருந்தால் அவரும் கவனிக்கத்தான் செய்திருப்பார். பிடிவாதமாக யிருந்தால் அவர் மட்டும் இரங்கி வருவாரா என்ன?" என்றார் பீதாம்பரம்.

"அவர் காலைப் பிடித்துக் கெஞ்சாததுதான் குறை. ஒரு தடவை நானும் என் குழந்தைகளுமாக மூன்று நாட்கள் அவர் வீட்டின்முன் பட்டினியும் பசியுமாகக் கிடந்தோம். அந்தப் பாவி எங்களை ஏறிட்டுக்கூடப் பார்க்கவில்லை. இதற்குமேல் வேறு எப்படிக் கேட்பது?"

"உன் கணவராவது தகப்பனாரிடம் சொன்னாரா?"

"அவரும் ஆயிரம் தடவை நடந்து விட்டார். நடந்து நடந்து கால் கடுத்ததுதான் பலன். அவருக்கே வெறுத்து விட்டது. மூன்று வருஷமாக அந்த வீட்டுப் பக்கமே போவதில்லை என்று முடிவு செய்து விட்டார்" என்றாள் கல்யாணி.

"சரியம்மா. எனக்கு முக்கியமான சில விவரங்கள் வேண்டும். ராத்திரி நாராயணன் வீட்டுக்கு எத்தனை மணிக்கு வந்தார். எங்கெங்கெல்லாம் போயிருந்தார் என்பதை விளக்கமாகச் சொல்லு" என்றார் பீதாம்பரம்.

இதுவரை அவர்களை வெளியே நிற்க வைத்துப் பேசிக் கொண்டிருந்த கல்யாணி பீதாமபரத்தையும் சுகுமாரனையும் அழைத்துச் சென்று வீட்டுக்குள்ளிருந்த கயிற்றுக் கட்டிலில் உட்காரச் சொன்னாள். அவளிடமிருந்து பதிலை எதிர்பார்ப்பவர் போல கல்யாணியின் முகத்தை நோக்கினார் பீதாம்பரம்.

பட்டினியால் வதங்கி, கூம்பிய தாமரையைப் போன்றிருந்த அவளுடைய முகத்தைப் பார்க்க பீதாம்பரத்துக்கு என்னவோ போல தானிருந்தது. கடமை என்ற ஒன்று இருக்கிறதே, பரிவோ இரக்கமோ காட்டி விட்டால் அதன் பொருளே அற்றுப் போய்விடுமே என்ற எண்ணத்தில் மனசைத் திடப்படுத்திக் கொண்டார்.

"நேற்றுப் பகல் பூராவும் எங்கெங்கெல்லாமோ வேலைக்குத் தேடியலைந்துவிட்டு சாயங்காலமாக வந்து சேர்ந்தார். அசதியில் நன்றாகத் தூங்கி விட்டார். சரியாகப் பதினொரு மணிக்கு எழுந்து வயிற்று வலியால் துடித்து கொண்டு ஆர்ப்பாட்டம் செய்தார். கடைசியில் அவராகவே எழுந்து டாக்டர் கைலாசம் வீட்டுக்குச் சென்று மருந்து வாங்கிக் குடித்துவிட்டு வந்து படுத்துக் கொண்டார்."

" திரும்பி வரும்போது எத்தனை மணியிருக்கும்?"

" இரண்டாவது ஆட்டம் சினிமா விட்டு விட்டார்கள்."

" அதாவது ஒன்றரை மணியிருக்குமா?"

" இருக்கலாம்."

" டாக்டர் வீட்டுக்குச் சென்று வர அவ்வளவு நேரம் ஆகுமா என்ன?"

"எனக்குத் தெரியாது."

"நீ எங்கேயாவது அவரைத் தேடிக் கொண்டு வெளியில் சென்றாயா?"

"இந்தக் குழந்தைகளை விட்டு விட்டு என்னால் அந்த ராத்திரியில் எப்படி வெளியே போக முடியும்?"

இந்தப் பதிலைக் கேட்டதும் பீதாம்பரம் 'சட்'டென்று நிமிர்ந்து கல்யாணியைப் பார்த்தார். அவள் கண்களிலிருந்து கண்ணீர் பெருகி வழிந்து கொண்டிருந்தது. துக்கம் தாளாமல் விம்மி விம்மி அழுதாள். அதற்குமேல் அங்கு தங்க பீதாம்பரத்துக்குப் பிடிக்கவில்லை.

"என்னம்மா இது? இதற்காகவா அழுவது? கடவுள் என்றுமே உங்களை இப்படி வைத்துவிட மாட்டார். அவரை நம்பு.........அவர்தான் நம்மையெல்லாம் ரட்சிக்கக் கூடியவர்" என்று சொல்லிவிட்டு உரிமையோடு இரண்டாம் கட்டுக்குச் சென்று அங்குள்ள சாமான்களை ஆராய்ந்தார். பிறகு மறுபடியும் வெளியே வந்து, "கோபியிடமாவது நீங்கள் உதவி கேட்டிருக்கலாமே" என்றார்.

"அவரும் கொஞ்ச நாள் எங்களுக்கு உதவத்தான் செய்தார். அதையும் தடை செய்து விட்டார் அந்தப் பாவி. பூர்வீகச் சொத்து அண்ணன் தம்பிக்குள் இன்னும் பிரிவினையாகவில்லை. அதைக் காட்டி தர்மம் செய்த அவர் கையிலும் விலங்கைப பூட்டி விட்டார். அண்ணன் தம்பி தகராறு வேண்டாம் என்று அவர் உதவியை ஏற்க மறுத்து விட்டோம்.'

" அவர் இங்கு வந்து போய்க் கொண்டிருக்கிறாரல்லவா?"

" ஏன், சிறிது நேரத்துக்கு முந்தி கூட வந்திருந்தார்."

" இங்கேயா?" என்று ஆச்சரியத்தோடு கேட்ட பீதாம்பரம் சந்தேகத்துடன் சுகுமாரனைப் பார்த்தார்.

" ஆமாம். எனக்கு ஆறுதல் சொல்லத்தான் வந்திருந்தார். போலீஸ்காரர்கள் விசாரணை செய்தால் உண்மையை ஒளிக்காமல்

சொல்லிவிட வேண்டுமென்று சொல்லிவிட்டுப் போனார்" என்றாள் கல்யாணி.

பீதாம்பரம் இதற்குமேல் கேள்வியொன்றும் கேட்க விரும்பவில்லை. வெளியே புறப்படுவதற்காகத் திரும்பியவர், சுவரில் வரிசையாகப் புகைப்படங்கள் மாட்டப்பட்டிருப்பதைக் கண்டதும் அவற்றைப் பார்ப்பதற்காக நின்று விட்டார். அத்தனை படங்களிலும் ஒரே ஒரு படம் அவரை அதிர்ச்சியடையச் செய்துவிட்டது. சுகுமாரனுக்கு மெதுவாக ஜாடை காட்டினார். அவனும் அந்தப் படத்தைப் பார்த்துவிட்டு ஆச்சரியமடைந்துவிட்டான். எப்போதோ ஒரு காலத்தில் பிடிக்கப்பட்ட அந்தப் படத்தில் ஓர் ஆணும் பெண்ணும் காட்சியளித்துக் கொண்டிருந்தார்கள்.

விறு விறுவென்று வெளியே நடந்து வந்தார் பீதாம்பரம். காரின் அருகில் நின்று கொண்டு அதை ஆச்சரியத்தோடு பார்த்துக் கொண்டு நின்ற நாராயணனின் மூன்று குழந்தைகளும் அவரைக் கண்டவுடன் ஒதுங்கி நின்றன. பீதாம்பரம் தம் சட்டைப் பையில் கையைவிட்டு, ஒரு கூத்துச் சில்லறையை எடுத்து மூன்று குழந்தைகளுக்கும் பகிர்ந்து கொடுத்தார். கை நிறையப் பணத்தைக் கண்ட அந்தச் சிறு குழந்தைகளின் முகங்கள் அடைந்த பிரகாசத்தில் சுகுமாரனின் கண்கள் கூசிவிட்டன.

கார் ஆலந்தூரைக் கடந்து பெரிய ரஸ்தாவில் சென்னையை நோக்கிச் சென்று கொண்டிருந்தது.

"சுகுமாரா! அந்தப் படத்திலிருப்பவர்களை உன்னால் அடையாளம் கண்டு பிடிக்க முடிந்ததா?" என்று கேட்டார்.

"என்ன ஸார்! இதுகூடத் தெரியாமல் இருப்பேனா? டாக்டர் விமலநாதனின் தங்கையும் அந்த அம்மாளின் கணவரும் தான் என்று எனக்கு உடனே புரிந்து விட்டதே" என்று சொன்னான் சுகுமாரன்.

"அந்தப் படத்தின் நிலையைக் கவனித்தால், படம் பிடிக்கப்பட்டு குறைந்தது இருபது வருடங்களாவது இருக்குமென்று தெரிகிறது. அவர்களுடைய படம் இங்கு வரவேண்டிய காரணம் என்ன என்று தான் புரியவில்லை. நாராயணன் நிச்சயமாக அந்தப் படத்தைப் பத்திரப்படுத்தி வைத்துக் கொண்டிருக்க மாட்டானென்று எனக்குத் தெரியும்" என்றார் பீதாம்பரம்.

நகருக்குள் புகுந்து விட்ட துப்பறியும் நிபுணர்களின் கார், போலீஸ் ஸ்டேஷனை நோக்கி வெகு வேகமாகச் சென்று கொண்டி

ருந்தது. பத்திரிகைக் கடையொன்றில் சஞ்சிகைகளையும் தினசரிகளையும் பரப்பிப் போட்டிருந்தார்கள். காரை நிறுத்தி அன்றைய மாலைப் பத்திரிகை ஒன்றை வாங்கிப் பிரித்தார் பீதாமபரம். அவர் பார்வை இரண்டாம் பக்கத்தில் வலது கோடிக்கே சென்றது. பகலில் ஹோட்டலின் முன் தங்கள் காரில் வந்து விழுந்த கடிதத்தில் கூறப்பட்டுள்ளதைப் போல "மாலை முழக்கம்" பத்திரிகையில் விளம்பரம் வந்திருந்தது.

"இன்னும் இருட்டிலேயே இருக்கிறீர்கள். இரவு பதினொன்றரை மணிக்கு ஹோட்டல் மாயாவுக்கு வாருங்களேன். ஒரே பிரகாசமாயிருக்கும்."

— இதுதான் அந்த விளம்பரம்.

படித்து முடித்ததும் குலையைப் பிசைவது போலிருந்தது பீதாம்பரத்துக்கு. மீண்டும் ஒரு கொலையா......?

எந்த இடத்தில் போலீஸ்காவல் பலமாக இருக்கும்படி ஏற்பாடு செய்திருந்தாரோ அங்கே தான் கொலை நடக்கப்போவதாக விளம்பரம் செய்யப்பட்டிருந்தது. எவ்வளவு துணிச்சல் இருக்க வேண்டும் அவர்களுக்கு? மீண்டுமொரு முறை விளமபரத்தைப் படித்தார் பீதாம்பரம். அவருக்குத் தலை சுற்றியது. பத்திரிகையை மடக்கி சுகுமாரனிடம் கொடுத்துவிட்டு காரை விட்டு இறங்கி எதிரேயிருந்த காபி ஹோட்டலுக்குள் நுழைந்தார். சூடாக காபி சாப்பிட்டால் தான் இதமாயிருக்குமென்று அவருக்குத் தோன்றியது போலிருக்கிறது.

ஹோட்டலை விட்டு வெளியேவந்த பீதாம்பரத்தின் முகத்தில் புது ஒளி பரவியிருந்தது. உற்சாகத்தோடு காரை ஓட்டிச்சென்று போலீஸ் ஸ்டேஷனுக்கு முன்னால் நிறுத்தினார். இவரை எதிர் பார்த்துக் கொண்டிருந்த ஏகாம்பரம் ஏற்செனவே பத்திரிகை விளம்பரத்தைப் படித்துவிட்டாராகையால், "மிஸ்டர் பீதாம் பரம்! நீங்கள் பயப்படாதீர்கள். இன்று அந்த மாயாவியின் சூரத்தனம் ஒன்றுமே நடக்காது. நீங்கள் சொன்னதற்கு அதிகமாகவே ஆள்களை அனுப்பியிருக்கிறேன்" என்று சொன்னார்.

'யானைக்கு ஒரு காலம் வந்தால் பூனைக்கு ஒரு காலம் வரும்' என்பதைப் போன்று, இதுவரை ஏகாம்பரத்தைப்பார்த்து தைரியம் சொல்லிய பீதாம்பரத்துக்கு, இன்ஸ்பெக்டர் தைரியம் சொல்லியது இருந்தது. இதை நினைத்ததும் பீதாம்பரத்துக்கும் சுகுமாரனுக்கும் சிரிப்புத்தான் வந்தது. தங்களால் இந்த வழக்கில் எதுவுமே செய்யமுடியாது என்று தீர்மானித்து விட்டனரோ என்று கூட அயர்ந்து விட்டார் பீதாம்பரம்.

மீண்டும் ஒரு முறை தினசரியைப் புரட்டிப்பார்த்தார். டாக்டர் விமலநாதனின் கொலைச்செய்தி பிரமாதமாகப் பிரசுரமாகியிருந்தது. பத்திரிகையில் விளம்பரம் செய்து கொலை நடந்த விவரம் வெகு சுவாரஸ்யமாகத் தரப்பட்டிருந்தது. அது பீதாம்பரத்தின் திறமைக்கும் ஒரு சூடு கொடுத்தது போலப் பட்டது அவருக்கு. "இந்த இன்ஸ்பெக்டர், முந்திரிக்கொட்டை மாதிரி முந்திக்கொண்டு எந்தச் செய்தியையும் கண்ணை மூடிக்கொண்டு பத்திரிகை நிருபர்களுக்குத் தெரிவித்து விடுகிறார். கர்மம்!" என்று தலையிலடித்துக்கொண்டு சுகுமாரன் பக்கம் திரும்பினார். சுகுமாரன் ஆலந்தூரில் தாங்கள் பார்த்த போட்டோவை நினைவூட்டினான். உடனே விமலநாதனின் தங்கையை விடுவித்து அழைத்துக் கொண்டுவந்தார் பீதாம்பரம். பயந்து நடுங்கிக் கொண்டிருந்த அந்த அம்மாளைச் சமாதானப்படுத்தி உட்கார வைப்பதற்குள் போதும் போதுமென்றாகிவிட்டது.

"அப்போது இருந்த பரபரப்பில் உங்களிடம் வசதியாகப் பேசமுடியாமலே போய்விட்டது. நேற்று டாக்டர் யாருக்காகவோ காத்திருந்தார் என்று மட்டும் சொன்னீர்களே தவிர அந்த நபர் யார் என்றே சொல்லவில்லையே" என்று கேட்டார் பீதாம்பரம்.

"எனக்குத் தெரியாது. தெரியவே தெரியாது" என்று தீர்க்கமாகச் சொன்னாள் அந்த அம்மாள்.

"நன்றாக யோசித்துச் சொல்லுங்கள். ஏனென்றால் அந்த நேரத்தில் அவரைப்பார்க்க வந்த ஆள் தான் அவரைக் கொன்றிருக்க வேண்டுமென்று நம்புகிறேன்"

"இருக்கவே யிருக்காது. அவள் அப்படிப்பட்ட முரட்டு வேலையைச் செய்யவே மாட்டாள்" என்று கூச்சலிட்டுச் சொன்னாள் டாக்டரின் தங்கை பார்வதி அம்மாள். ஆனால் மறுகணமே, தான் ஏதோ செய்யத் தகாத ஒன்றைச்செய்து விட்டதைப்போல உதட்டைக் கடித்துக்கொண்டு தலைகுனிந்து விட்டாள்.

'அவள்' என்று பார்வதி அம்மாள் சொன்னதும் பீதாம்பரத்துக்குப் பிடி கிடைத்துவிட்டது.

"பார்த்தீர்களா? உங்களுக்குத் தெரிந்துகொண்டு தானே என்னிடம் மழுப்பிவிட்டீர்கள்?" என்றார்.

"இல்லை, எனக்குத் தெரியாது. எனக்கு ஒன்றுமே தெரியாது" என்று மேலும் இரைந்து பேசினாள் அவள்.

"உங்களை நான் ஒன்றும் செய்யப்போவதில்லை. ஆனால், நாராயணனின் மனைவி கல்யாணி யாரென்று மட்டும் சொல்லுங்கள், போதும்."

"அவள் உங்களிடம் என்ன சொன்னுள் ?" என்று பதறிப் போய்க் கேட்டாள் பார்வதி அம்மாள்.

"ஒன்றும் சொல்லவில்லை. நாராயணன் வீட்டில் கிடந்த பழைய போட்டோ ஒன்றில் உங்கள் படத்தைப்பார்த்தேன். அவ்வளவுதான். ஆனல் கல்யாணியைப் பார்த்த பிறகு என் மனசு என்னவோ மாதிரி ஆகிவிட்டது" என்று தந்திரமாகப் பேச்சைத்தொடங்கினர் பீதாம்பரம்.

"நீங்கள் என்ன நினைத்துக் கொண்டாலும் சரி. நான் இப்போது உங்களிடம் உண்மையையே சொல்லப்போகிறேன். எனக்குக் குழந்தை பிறக்கவேயில்லை. என் கணவர் ஊரில் அநாதைக் குழந்தையாகத் திரிந்த கல்யாணியை நான் தான் எடுத்து வளர்த்தேன். அண்ணு வீட்டிற்கு வந்த பிறகும அவளை என்னுடனேயே வைத்துக்கொண்டேன். நாராயணன் அவள் மீது ஆசைப்பட்டு அவளைக்கல்யாணம் செய துகொள்ளப் பிடிவாதம் செய்தபோது நான் எவ்வளவோ சந்தோஷப்பட்டேன். ஆனல் அண்ணுவின் அகங்காரத்துக்கு முன் என் மகிழ்ச்சி எப்படி மறைந்தது என்று சொல்ல வேண்டியதில்லை. நாராயணன், தான் நினைத்ததைச் சாதித்துவிட்டான். இதில் எனக்கு உள்ளூர மகிழ்ச்சி. முதலில் அண்ணு கட்சியை நான் ஆதரிப்பவள் போல நடித்துக் கொண்டிருந்தேனென்ருலும் சிறுகச் சிறுக அவரிடம் சொல்லிச் சமாதானம் செய்துவிடலாம் என்று எண்ணினேன். இந்தத்திட்டத்தோடு ஒருநாள் அண்ணுவிடம் மெதுவாகப் பேச்சைத்துவக்கினேன். அவர் 'பார்வதி' என்று கத்திக்கொண்டே என்னை எரித்துவிடுபவர்போல பார்த்தார். அதோடு என் மனதில் கிடந்து அடித்துக் கொண்ட சிறு ஆசையும் அவிந்துவிட்டது.

"நாராயணன் பலமுறை அண்ணுவிடம் அலைந்தான் ; பலனில்லை. கல்யாணியும் எத்தனையோ முறை நடந்துவிட்டாள். ஒன்றும் பிரயோசனமில்லை. நேற்று நான் தான் கல்யாணிக்கு யோசனை சொன்னேன்! 'இரவு வெளிக்கதவைத் திறந்து வைத்திருக்கிறேன். வந்து மாமாவைத்தனியாகக் கண்டு கெஞ்சிக் கூத்தாடு' என்று சொன்னேன். அதன்படி வந்தாள். இவ்வளவுக்கும் ஏற்பாடு செய்த நான் முன்னேரத்திலேயே தூங்கிவிட்டேன். அண்ணு போட்ட சத்தத்தில் தான் விழித்துக் கொண்டேன். ஓடிச்சென்று பார்த்தேன். அண்ணு ரத்த வெள்ளத்தில் மூழ்கிக்கிடந்தார், அங்கு யாரையும் காணேம்" என்று முடித்தாள் பார்வதி அம்மாள்.

“கல்யாணி கூட அங்கு இல்லையா?” என்று தந்திரம் கலந்த பரிவோடு கேட்டார் பீதாம்பரம்.

“இல்லை. அவள் வந்தது தெரியும். மாமாவும் மருமகளும் காரசாரமாகப்பேசிக் கொண்டார்கள். சிறிது நேரம்தான் அவர்கள் பேச்சைக் கேட்டேன். பிறகு தூங்கிவிட்டேன்.”

“நீங்கள் தூங்கியதால் உங்கள் அண்ணாவின் உயிருக்கே ஆபத்தல்லவா வந்துவிட்டது?” என்றார் பீதாம்பரம்.

“அவர் உயிருக்கு ஆபத்து வந்து விட்டதால் யாருக்கும் நஷ்டமில்லையே. பெற்றபிள்ளைக்குக் கொடுக்கமாட்டேன் என்று சொல்லிவிட்டார். எங்கள் அப்பா சம்பாதித்த சொத்தையாவது உடன் பிறந்த தம்பிக்குக் கொடுக்க வேண்டுமல்லவா? இதோ, அதோ என்று கோபிக்குக் கையை விரித்துக்கொண்டே வந்தார். கோபி தன் கையிலிருந்தால் நிச்சயம் நாராயணனையும் அவன் மனைவி மக்களையும் காப்பாற்றியிருப்பான். இல்லாத குறைதான். ஏதோ சர்க்கஸ் கம்பெனிவைத்து நொடித்துப்போய், கையிலுள்ளதை வைத்துக் கொண்டு ஏதாவது வியாபாரம் நடத்தலாம் என்றிருக்கிறான்” என்று நீண்ட கதை ஒன்றையே சொல்லி முடித்தாள் பார்வதி அம்மாள்.

பீதாம்பரம் எல்லாவற்றையும் அமைதியாகக்கேட்டுக் கொண்டிருந்து விட்டு இன்ஸ்பெக்டர் ஏகாம்பரத்திடம் சென்றார். சில நிமிஷங்களில் திரும்பிவந்து பார்வதி அம்மாளுக்கும் அவள் கணவருக்கும் விடுதலை என்ற மகிழ்ச்சிகரமான செய்தியை அவர்களிடம் சொன்னார். அதோடு அவர்களைத் தாமே அழைத்துக் கொண்டு அவர்கள் வீட்டுக்குச்சென்றார். இத்தனையையும் கவனித்துக் கொண்டிருந்தான் சுகுமாரன். சம்பந்தப்பட்ட யாருக்கும் பீதாம்பரம் வலியப்போய் ஒத்தாசை செய்கிறாரென்றால் அது அவர்களுக்கே ஆபத்து என்று முடிவு செய்து கொண்டான் அவன்.

---

## 4. பள்ளித் தோழி

‘ஹோட்டல் மாயா’ சமுத்திரக் கன்னியை நோக்கித் தவமிருந்தபடி மோனத்தில் ஆழ்ந்திருப்பது போல தெரிந்தது. நிலவரசன் தன் ஒளியைக்காட்டி சமுத்திரப் பெண்ணைத் தழுவ முயற்சித்துக் கொண்டேயிருந்தான். ஆனால் ஒளிவெள்ளத்தில் மூழ்கி முக்குளித்துக் கொண்டிருந்த ‘ஹோட்டல் மாயா’ வின்

மீது அவளுக்கு மோகமோ என்னவோ தன் அலைக்கரங்களை நீட்டி நீட்டி அதைப்பற்ற முயன்று கொண்டிருந்தாள்.

இப்படி ஒரு கற்பனை துப்பறியும் நிபுணருக்குத் தோன்ற வேண்டுமானால் ஹோட்டல் மாயாவின் வனப்பைப் பற்றிச் சொல்ல வேண்டியதேயில்லை. பீதாம்பரமும் சுகுமாரனும் காரை விட்டு இறங்கி ஹோட்டலுக்குள் சென்றனர். மாறுவுடையில் அப்பாவி போல உலவிக்கொண்டிருந்தான் ஒரு ஸி.ஐ.டி. யாரும் தங்களுக்குத் தெரிந்தவர்களென்று காட்டிக்கொள்ளாமல் இருவரும் நேராக உள்ளே சென்று ஓர் ஓரத்தில் உட்கார்ந்து கொண்டனர். சாதாரண உடையில் உட்கார்ந்திருந்த ஏகாம்பரம் தம் தோற்றத்தை வெகுவாக மறைத்திருந்தார். அசபயில் ஏகாம்பரத்தைக் கவனித்துக் கொண்டார் துப்பறியும் பீதாம்பரம். சும்மா உட்கார்ந்திருந்தால் பார்ப்பவர்களுக்குச் சந்தேகம் தோன்றுமே என்று கருதி ஏதோ தின்பதற்குக் கொண்டு வரச் சொன்னான் சுகுமாரன்.

மணி சரியாகப் பதினொன்று. சிலருக்கு ஆடம்பரமும் அகம்பாவமும் சேர்ந்துவிட்டால் நினைத்த நேரத்திலெல்லாம் பசியெடுக்கும் போலிருக்கிறது. ஏனென்றால் ஊருக்கு ஒதுக்குப் புறத்தில் சமுத்திரக்கரை ஓரத்தில் இருந்த சொகுசான ஹோட்டலான மாயாவுக்கு அந்த நடுநிசியிலும் உணவருந்தவோ, சிற்றுண்டி சாப்பிடவோ யாராவது வந்து போய்க் கொண்டு தானிருந்தார்கள்.

மணி பதினொன்று பத்து. சற்று நேரம் அமைதியோடிருந்த ஹோட்டலின் மோனத்தைக் கலைக்க வென்று வந்து சேர்ந்தார்கள் யாரோ சிலர். கலகலப்பாகச் சிரித்து முழக்கிக் கொண்டு உள்ளே நுழைந்த அவர்களைக் கவனித்தார் பீதாம்பரம். நன்றாக அலங்கரித்துக் கொண்டு மூன்று பெண்களும், நாகரிகமாக உடையணிந்த இரு ஆண்களும் வந்து கொண்டிருந்தார்கள். அவர்களைப் பார்த்தால் கணவன் மனைவியர் என்று சொல்லமுடியாது. அப்படியே யிருந்தாலும் யாருக்கு யார் மனைவி என்று புரிந்துகொள்ள முடியவில்லை. மூன்று பெண்கள், இரண்டு ஆண்கள். பெண்கள் மூவரில் ஒரே ஒருத்தி மட்டும் செக்கச் செவேலென்று அழகுப்பதுமை போலிருந்தாள். கை கால்கள் கடைந்தெடுத்த தந்தம் போல பளபளவென்றிருந்தன. கருநாகம் போன்ற ஜடை. பணக்காரக் களை முகத்தில் ஒளிவிட்டதென்றாலும் ஏதோ ஒரு தாங்கமுடியாத வேதனை அவளைச் சூழ்ந்துள்ளது போல அவள் கண்கள் பரக்கப் பரக்க விழித்தன. உடன் வந்திருந்த நான்கு பேரையும் என்னமோ ஒரு மாதிரி

யாகப் பார்த்துக் கொண்டிருந்தாள். அவர்கள் சிரிக்கும்போது தானும் காரணமில்லாமல் சிரித்தாள். வேண்டுமென்றே சிரிப்பை வரவழைத்துக் கொண்டே சிரித்தாள் என்று நன்ருகத் தெரிந்தது. எதை எதையோ சாப்பிட்டார்கள். பத்துப் பதினைந்து நிமிடங்களில் எல்லாவற்றையும் முடித்துக்கொண்டு வெளியே சென்றுவிட்டனர்.

பீதாம்பரம் மணியைப்பார்த்தார். மணி பதினென்று இருபத்தைந்து. இன்னும் ஐந்தே நிமிடங்கள்......ஐந்தே நிமிடங்கள்......!

பிரபலதுப்பறியும் நிபுணர் இருக்குமிடத்தில் அவர் அறிந்து ஒரு கொலை நடக்கப்போகிறது. அதை அவர் பார்க்கப் போகிருர்......

பீதாம்பரம் சுற்றும் முற்றும் ஓரக்கண்களால் பார்த்தார். எல்லோரும் சகஜமாகவே காணப்பட்டனர். யாரும் சந்தேகப் படும்படியாக இல்லை. "இங்குக் கூடியிருக்கும் இவ்வளவு பேரில் உயிரிழக்கப் போகும் அப்பாவி யார்?"— இதே கேள்விதான் அவர் இதயத்தைக் குடைந்தெடுத்துக் கொண்டிருந்தது.

சுகுமாரன் மணியைப் பார்த்தான். பதினென்று இருபத்தெட்டு. அவனுடைய இதயம் பட படவென்று வேகமாக அடித்துக் கொண்டது. இன்னும் இரண்டு நிமிடங்கள். இரண்டே இரண்டு நிமிடங்கள்......! சுகுமாரனின் இதயம் இறுப் போய் விழுந்து விடுவதைப்போலப் பட்டது.

'டங்' கென்று ஒருமுறை அடித்தது ஹோட்டல் மாயாவின் கடிகாரம். அதைத் தொடர்ந்து ஒரு பேயலறல் அந்த ஹோட்டலுக்குள் கேட்கப்போகிறது என்று காதைத் தீட்டிக் கொண்டிருந்தான் சுகுமாரன். ஆனால் என்ன ஏமாற்றம்? அப்படி ஒன்றுமே கேட்கவில்லை. சற்று முன்போலவே அமைதி தான் தவழ்ந்து கொண்டிருந்தது. யாரும் கூச்சலிடவுமில்லை. பயங்கரமாக அலறவுமில்லை......

பீதாம்பரத்துக்குப் பரம திருப்தி. கடிகாரத்தைப் பார்த்தார். பதினென்று முப்பத்தைந்து. புன்னகை தவழ எழுந்து நின்று, ஏகாம்பரத்தைப் பார்த்தார். அவரும் தம் இடத்தை விட்டு எழுந்தார். திடீரென்று வாசலில் வந்து நின்ற ஒரு போலீஸ்காரன் விசில் ஒன்றை வாயில் வைத்து தன் சக்தி கொண்டமட்டும் ஊதினன். பதறியடித்துக்கொண்டு அவனருகில் ஓடினர் பீதாம்பரம். அவன் வாய் குழற அரையும் குறையுமாய்ப் பேசினன். ஹோட்டல் மாயாவுக்குச் சற்று தூரத்தில்

யாரோ கொலை செய்யப்பட்டு விட்டார்கள் என்று செய்தியறிந்து பீதாம்பரத்தைப் பின்பற்றி ஓடினார் இன்ஸ்பெக்டர் ஏகாம்பரம்.

ஹோட்டல் மாயாவில் சிற்றுண்டி அருந்திவிட்டுச் சிறிது முன்பு தான் வெளியே சென்ற மூன்று பெண்கள் இரண்டு ஆண்களில் ஒரு பெண் ரத்த வெள்ளத்தில் மூழ்கிக் கிடந்தாள். மூன்று பெண்களிலும் அழகானவள் என்று பீதாம்பரம் அபிப்பிராயப்பட்ட அதே பெண்தான் கொலை செய்யப்பட்டுக் கிடந்தாள். சட்டென்று குனிந்து அவளருகில் கிடந்த கத்தியை எடுத்தார். டாக்டர் விமலநாதனையும் ஹோட்டல் கிளார்க் வைத்திநாதனையும் கொல்ல உபயோகப்பட்ட அதே மாதிரி மரப்பிடியுள்ள மலையாளச் சூரிக் கத்திதான் இதுவும். கத்தியின் கைப்பிடியில் நூலில் கட்டித் தொங்கவிடப் பட்டிருந்த அட்டையைக் கையிலெடுத்துக் கொண்டு டார்ச் விளக்கை அடித்துப் பார்த்தார்.

**“வி-ரோ-தி’—இந்தத் திட்டத்தில் இரண்டாவது கொலை”**

என்று ஆங்கிலத்தில் டைப் அடிக்கப்பட்டிருந்தது.

நிமிர்ந்து சுற்றி நின்று கொண்டிருந்த எல்லோரையும் பார்த்தார் பீதாம்பரம். கொலையுண்ட பெண்ணுடன் வந்திருந்த இரு ஆண்களும் இரண்டு பெண்களும் பதறியபடி நின்றுகொண்டிருந்தார்கள். அவர்களை உடனே கைது செய்து அழைத்துச் செல்லுமாறு இன்ஸ்பெக்டருக்குச் சொல்லிவிட்டு “மாலை முழக்கம்” ஆபீஸுக்கு விரைந்தார். அவருடன் நிழலைப் போல பின் தொடர்ந்த சுகுமாரன் ஒன்றுமே பேசாமல் நடந்து கொண்டிருந்தான் காரை நோக்கி.

பீதாம்பரம் தம்முடைய காரை ‘மாலை முழக்கம்’ ஆபீஸுக்கு முன் நிறுத்திவிட்டு உள்ளே சென்றார். அங்கு இரவு ‘ஷிபடு’ வேலை செய்து கொண்டிருந்தது. அந்த நடு நிசியில் மானேஜரும் விளம்பர மானேஜரும் எங்கே இருக்கப் போகிறார்கள்? நான்கைந்து உதவி ஆசிரியர்கள் டெலிபிரிண்டர் கொடுத்துக்கொண்டிருக்கும் செய்திகளை மொழிபெயர்த்துக் கொண்டிருந்தனர். ஒரு கோடியில் ‘ப்ரூப் ரீடர்கள்’ அச்சுப் பிழையைத் திருத்திக் கொண்டிருந்தனர். உதவி ஆசிரியர் ஒருவரிடம் தம்மை அறிமுகம் செய்து கொண்ட பீதாம்பரம், அன்று மாலைப் பத்திரிகையில், கொலை சம்பந்தமாகப் பிரசுரமாகியிருந்த விளம்பர மூலத்தைக் கேட்டார். நல்ல வேளையாக ‘மாலை முழக்கம்’ காரியாலயம் அந்தக் காகிதத்தை வெகு பத்திரமாக வைத்திருந்தது. பீதாம்பரத்துக்கு உதவி செய்த உதவி ஆசிரியர் கைமாறு கரு

திச் செய்தவர்போல அவரிடம் கடைசிச் செய்தி ஏதாவது உண்டா என்று ஆவலோடு கேட்டார். பத்திரிகைக்காரர்கள் எங்கு சென்றாலும் விடமாட்டார்கள் என்று மனசுக்குள் எண்ணிக்கொண்ட பீதாம்பரம், அதுவரை நடந்தவற்றைச் சுருக்கமாகச் சொல்லி விட்டு வெளியேறினார்.

இவர்களுக்கு முன், கொலை செய்யப்பட்ட பெண்ணுடன் வந்தவர்கள கைது செய்யப்பட்டு போலீஸ் ஸ்டேஷனில் வைக்கப்பட்டிருந்தனர். அவர்களில் அநேகமாக எல்லோருமே பயத்தினால் ஆடிப்போயிருந்தார்கள் என்றுதான் சொல்லவேண்டும். தாம்பரம முகத்தில் கடுமையை வரவழைத்துக் கொண்டு விசாரணையை ஆரம்பித்தார்.

முதலில் ஓர் ஆணைத் தனியாக அழைத்துச் சென்று விசாரித்தார்.

"உம்முடைய பெயர்?"

"மனோஹரன்."

"உம்முடனிருக்கும் பெண் உமக்கு என்ன வேண்டும்?"

"என் மனைவி"

"கொலை செய்யப்பட்ட பெண்?"

"என் மனைவியின் பள்ளித் தோழி."

"அவளைக் கொலை செய்ய வேண்டுமென்று திட்டமிட்டே தான் ஹோட்டல் மாயாவுக்கு அழைத்துக் கொண்டு வந்தீர்களா?"

"இல்லவே யில்லை. உண்மை அதுவல்ல. கொலை செய்யப்பட்ட ரோஹிணி என் மனைவியுடன் பள்ளியில் படித்தவள். கோடீஸ்வரர் ஒருவரின் மகள். மனம் விரும்பி ஒரு முரடனைக் கல்யாணம் செய்து கொண்டாள். சிறிது காலம் சென்ற பிறகு தான் கணவனின் குணத்தை அறிந்தாள். மிகவும் கஷ்டப்பட்டாள். ஒரு மாதிரியாகக் கணவனுடன், வேண்டுமென்றே சண்டையிட்டுக் கொண்டு அவனை விட்டுப் பிரிந்து விட்டாள். இப்போது தன் சொந்த பங்களாவில் தன் தாய் மாமாவுடனிருக்கிறாள். அவள் எப்போதுமே சோகமாயிருக்கிறாளென்று என் மனைவியை அவளுடன் பழக ஏற்பாடு செய்தார் ரோஹிணியின் மாமா" என்றான் மனோஹரன்.

'உங்களுடன் வந்திருக்கும் இன்னொரு ஆணும் பெண்ணும் கணவனும் மனைவியுமா?" என்று கேட்டார் பீதாம்பரம்.

"இல்லை. அவன் என் நண்பன். அந்தப் பெண் என் மனைவியின் சிநேகிதி. அவளும் என் மனைவியுமாகத்தான்

ரோஹிணியுடன் சமீபகாலமாகப் பழகுகின்றனர். கணவன் செய்த அட்டகாசங்களிலிருந்து தப்பிக்கொண்ட ரோஹிணி, தோழிமார்களுடன் நிம்மதியாகப் பொழுதைக் கழிக்கட்டு மெனறேதான் என் மனைவிக்கு இந்தச் சலுகையைக் கொடுத் தேன். இன்று நாங்களெல்லோருமாகச் சினிமாப் பார்த்து விட்டு ஹோட்டல் மாயாவுக்கு வந்து சிற்றுண்டி அருந்திய பிறகு வீட்டுக்குச் செல்லலாம் எனறு திட்டமிட்டிருந்தோம். அதன்படியே சினிமாப் பார்த்து விட்டு ஹோட்டல் மாயாவுக்கு வந்தோம். அங்கு சாப்பிட்டு விட்டு வெளியேறி நடந்தோம் என நண்பனும் ரோஹிணியும் தனியாகப் பேசிக்கொண்டே எங் களுக்கு முன் வெகுதூரம் நடந்து விட்டார்கள். சிறிது நேரத் தில் என் நண்பன வரதராஜன் வாயில் வயிற்றில் அடித்துக் கொண்டு எங்களை நோக்கி ஓடிவந்தான்......” என்று பேசிக் கொண்டே போனான் மனோஹரன்.

“அப்போது அவன் என்ன சொன்னான் என்பதைச் சரி யாகச் சொல்லமுடியுமா?” என்று இடைமறித்துக் கேட்டார் பீதாம்பரம்.

“ஐயையோ, ‘மனோஹர் ரோஹிணியைக் குத்திட்டு ஓடுறான் பார்’ என்று தான அலறினான். அதைக் கேட்டதும் அவனைப் பின் தொடர்ந்து பயத்தால் சத்தமிட்டுக் கொண்டே ஓடினேன். எனக்குப் பின்னால் என் மனைவியும் அவள் தோழியும் கூக்குர லிட்டுக் கொண்டு ஓடிவந்தார்கள். எங்கள் எல்லோரின் ஓலத்தை யும் கேட்டு இரண்டு போலீஸ்காரர்கள் எங்கள் எல்லோருக்கும் பின்னால் ஓடிவந்தார்கள். ரோஹிணி கத்தியால் குத்தப்பட்டுக் கிடந்த இடத்தை நாங்கள் அடைவதற்குள் அவளுடைய உயிர் பிரிந்து விட்டது. காலையும் கையையும் விரைக்க நீட்டி விட் டாள். வரதராஜன் இன்னும் நடுங்கிக் கொண்டுதானிருந்தான். அவனால் பேச முடியவில்லை. நடை பாதையில் புதர் போன் றிருக்கும் செடிகளைக் காட்டினான். நான சிறிது தூரம் ஓடிச் சென்று புதர்களுக்குள் பார்த்தேன். யாரையும் காணவில்லை. நல்ல நிலா வெளிச்சம். யாரும அங்கு ஒளிந்து கொண்டிருந் தாலும் நன்ருகத் தெரியும். ஒரு பர்லாங்கு தூரத்துக்கு மேல் செடி மறைவுகளில் தேடினேன். யாரையுமே காணவில்லை” என்று முடித்தான் மனோஹரன்.

பீதாம்பரம் வரதராஜனையும் மடக்கி மடக்கி விசாரணை செய்தார். மனோஹரன் சொல்லியதற்கு மேல் அவன் ஒரு வரி கூட அதிகமாகச் சொல்லவில்லை. “நாங்களிருவரும் தனியாகப் பேசிக் கொண்டே நடந்து கொண்டிருந்தோம். அருகில் புதர்

போன்றிருந்த செடி மறைவிலிருந்து திடீரென்று ஒரு ஆள் எங்கள் முன் பாய்ந்து ரோஹிணியைக் குத்தி விட்டு ஓடி மறைந்து விட்டான். அவனை அடையாளமே கண்டு பிடிக்க முடியாதபடி முகத்தை மறைத்திருந்தான்'' என்று மட்டும புதிதாகச் சொன்னான் வரதராஜன். அவன் மீது பீதாம்பரத்துக்குச் சந்தேக மாகி விட்டது. அவனைத் தவிர மற்ற எல்லோரையும் வெளியே அனுப்ப ஏற்பாடு செய்தார்.

விடிந்தது. சுகுமாரனை அழைத்துக்கொண்டு ரோஹிணியின் பங்களாவுக்கு ஓடினார் பீதாபபரம். அங்கு அவருடைய மாமா வைக் காணவில்லை. அவர் மூன்று நாட்களுக்கு முன்பு வெளி யூருக்குச் சென்றவர் இன்னும் திரும்பவேயில்லை என்றான் வேலைக்காரன். எஜமானியின் கொலைச் செய்தியைக் கேட்டுச் சிறிது வருந்தினான் அந்த வேலைக்காரன். இதைப் பீதாம்பரம் கவனிக்கத் தவறவில்லை. பிறகு ரோஹிணியின் அறைக்குச் சென்று சோதனையிட ஆரம்பித்தார். ஒன்றும் பயனுள்ளதாகத் தோன்றவில்லை அவருக்கு. வேறோர் அறையைச் சோதனை செய்வதறகாக அதைத் திறக்க முயன்றார். இதற்குள் வேலைக்காரன் தடுத்துவிட்டான். ரோஹிணியின் மாமாவைத் தவிர அந்த அறைக்குள் வேறு யாரும் போகக்கூடாதென்பது அவருடைய கண்டிப்பான உத்திரவாம. ஏதோ ஒன்றை மனசில் வைத்துக்கொண்டு வேலைக்காரன் சொன்னபடியே, ரோஹிணி யின் மாமா வந்த பிறகு அந்த அறையைச் சோதனை செய்யச் சம்மதித்து விட்டார். ரோஹிணியின் அறையையே இன்னும் ஆராய்ந்து கொண்டிருந்த சுகுமாரன், எதையோ காணாததைக் கண்டு விட்டவன் போல பீதாம்பரத்தை நோக்கி ஓடி வந்தான்.

"இது ரோஹிணியின் கைப் பையில் ஒரு ஓரத்தில் கசங்கிப் போய்க் கிடந்தது ஸார்" என்று ஒரு சிறிய கடிதத்தைக் காட்டினான் சுகுமாரன்.

அந்தத் துண்டுக் கடிதத்தைப் பிரித்துப் படித்தார் பீதாம்பரம்!

> "வரதன் இப்போது உனக்கு ஜோடியோ? இது அழிவு காலத்துக்குத்தான். அவனே உனக்கு உலை வைப்பான்."

இவ்வளவு தான் எழுதப்பட்டிருந்த அந்தச் சிறிய சீட்டு பீதாம்பரத்துக்கு மட்டும் என்னவோ ஆயிரம் பக்கம் கொண்ட பெரிய நாவல் போல பட்டது. அவர் முகத்தில் மகிழ்ச்சி அரும்பியது. போலீஸ் ஸ்டேஷனை நோக்கி விரைந்தார். நல்ல

வேளையாக வரதனை வெளியே விடாமல் வைத்துக்கொண்டோமே என்று அவருக்கு ஒரு திருப்தியாயிருந்தது.

வரதனை அழைத்துக்கொண்டு மீண்டும் ரோஹிணியின் பங்களாவுக்கே சென்றார் பீதாம்பரம். மூன்றாவது மாடியிலுள்ள அவளுடைய அறைக்குச் செல்வதென்றால் பெரிய மலைப்பாயிருந்தது. வேலைக்காரனும் கூடவே வந்தான். மாடிப் படிகளில் ஏறும்போதே அவன் கதை அளக்க ஆரம்பித்துவிட்டான்.

"சின்னம்மா நிலைமை தெரிந்திருந்தும் ஐயா அடிக்கடி வெளியூர் வெளியூருன்னு போயிடுறாங்க. இங்கேதான் பட்டணத்துக்குள்ளே எங்கேயாவது இருந்துக்கிட்டு வெளியூர் போறதாகப் பொய் சொல்றாருன்னு ரோஹிணி அம்மா ரெண்டு நாளைக்கு முன்னாலே கூடச் சொல்லிச்சு. எனக்கு என்னமோ ஒண்ணும் புரியலீங்க" என்றான் வேலைக்காரன். அவன் சொன்ன எல்லாவற்றையும் கேட்டுக்கொண்டே வந்த பீதாம்பரம் பதிலுக்காக ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை.

வேலைக்காரனை வெளியே இருக்கச் சொல்லிவிட்டு வரதனுடன் ரோஹிணியின் அறைக்குள் சென்று உட்பக்கமாகத் தாளிட்டுக்கொண்டார் பீதாம்பரம். இதைக் கண்டதும் வரதனுடைய உடலெல்லாம் நடுங்கியது. பீதாம்பரம் அவன் பக்கமாகத் திரும்பி "இதோ பார் வரதா! உன்னிடம் இவ்வளவு இரகசியமாகப் பேசுவதற்கே உன் மீதுள்ள இரக்கம் தான் காரணம். ரோஹிணியைக் கொல்ல வேண்டிய அவசியமில்லையென்று சாதிக்கிறாய். இதற்கென்ன சொல்லுகிறாய்?" என்று ரோஹிணியின் கைப் பையில் கண்டெடுத்த காகிதத்தைக் காண்பித்தார்.

பீதாம்பரம் கொடுத்த கடிதத்தை வாங்கிப் படித்த வரதனின் முகம் பயத்தால் ஏழு கோணங்களில் வளைந்து நெளிந்தது. ஒன்றும் பதில் பேசாமல் நின்றுகொண்டிருந்தான்.

"என்னிடம் உண்மையைச் சொல்லிவிடு. உன்னைத் தப்ப வைக்க எவ்வளவோ வழிகளிருக்கின்றன" என்றார் பீதாம்பரம்.

வரதன் மனசைத் திடப்படுத்திக்கொண்டு பேச ஆரம்பித்தான். "அதோ அந்தப் பீரோவைத் திறங்கள். அதற்குள் எல்லா ரகசியமும் இருக்கிறது" என்றான். அவன் சொன்னபடி அறையின் கோடியிலிருந்த பீரோவை நோக்கிச் சென்றார் பீதாம்பரம். திடீரென்று வரதன் பின்னோக்கி ஓடி ஜன்னலில் ஏறிக் கீழே பாய்ந்து விட்டான். 'விருட்' டென்று திரும்பிப் பார்த்த பீதாம்பரம் வரதன் செய்துவிட்ட காரியத்தை உணர்ந்து

ஓடிச் சென்று ஜன்னல் வழியாகக் கீழே பார்த்தார். கீழே கிடு கிடு பாதாளத்தில் வரதன் மண்டை உடைந்து, மூளை சிதறி, உயிரை விடத் துடிதுடித்துக் கொண்டு கிடந்தான். அப்போது தான் காம்பௌண்டுக்குள் நுழைந்து கொண்டிருந்த இன்ஸ் பெக்டர் ஏகாம்பரமும் சுகுமாரனும் வரதனை நோக்கி ஓடி வந்தார்கள். பீதாம்பரம் அறைக் கதவைத் திறந்து கொண்டு மாடிப்படிகளில் இறங்கி ஓடினார். அவர் வரதனை நெருங்குவதற்குள் அவன் உயிர் பிரிந்து விட்டது. வரதன் தன்னை மாய்த்துக் கொள்ளச் செய்த தந்திரம் தான், தம் கவனத்தைப் பீரோப் பக்கம் திருப்பி விட்டது என்று அப்போது தான் உணர்ந்தார் பீதாம்பரம். வரதனுக்கு நேர்ந்து விட்ட எதிர்பாராத முடிவு பீதாம்பரத்தை வெகுவாகச் சோதித்து விட்டது. துக்கம் தோய்ந்த முகத்துடன் ஸ்டேஷனை நோக்கிச் சென்றார்.

எல்லா வேலைகளையும் முடித்துக் கொண்டு வந்து சேர்ந்தார் இன்ஸ்பெக்டர் ஏகாம்பரம். காலைப் பத்திரிகைகளில் ரோஹிணி கொலை செய்யப்பட்ட செய்தி பிரமாதமாகப் பிரசுரம் செய்யப் பட்டிருந்தது. போலீஸ் இலாகா திணறுவதைக் கேலிச் சித்திர மாகப் போட்டிருந்தது ஒரு பத்திரிகை.

கொலைக்கு உபயோகிக்கப்பட்டிருந்த கத்தியில் இணைக்கப் பட்டிருந்த சீட்டையும் 'மாலை முழக்கம்' பத்திரிகைக் காரியால யத்திலிருந்து வாங்கி வந்திருந்த விளம்பர மூலத்தையும் ஒத் திட்டுப் பார்த்தார் பீதாம்பரம். இரண்டும் டைப் அடிக்கப் பட்டிருந்தன. எழுத்துக்களும் ஒரே மிஷினில் உள்ள எழுத்துக் களாகவேயிருந்தன. அந்த ஆச்சரியத்தைச் சுகுமாரனிடமும் இன்ஸ்பெக்டரிடமும் தெரிவித்தார். மூவரும் சேர்ந்து உட் கார்ந்து கொண்டு ஆராய்ச்சி நடத்திக் கொண்டிருக்கும் அந்த நேரம் பார்த்து டாக்டர் விமலநாதனின் தம்பி கோபி வந்து சேர்ந்தார். பீதாம்பரம் 'டக்' கென்று தம் கையிலுள்ள காகி தங்களை மறைத்து விட்டு அவரை ஒரு நாற்காலியில் உட்காரச் சொன்னார். கோபி பேச ஆரம்பித்தார்.

"நீங்கள் நேற்று நாராயணனின் வீட்டுக்குப் போயிருந்த தாகக் கல்யாணி சொன்னாள்..." என்று இழுத்தார் கோபி.

"எங்களுக்கு முன்னால் நீங்கள் அங்கு போயிருந்தீர்கள் என்பதையும் அந்தப் பெண் சொன்னாள்."

"ஆமாம். போலீஸைக் கண்டு பயந்துவிடக்கூடாதே என்று எண்ணித்தான் அவர்களுக்குத் தைரியம் சொல்லப் போயிருந்தேன். கல்யாணிக்கு நான் அவ்வளவு தைரியம் சொல்லி யிராவிட்டால் அவள் உங்களுடன் சரியாகக் கூடப் பேசியிருக்க மாட்டாள்" என்றார் கோபி.

"இதற்குப் பயந்துதான் நாராயணன் தலைமறைவாக அலை கிருரோ?"

"சேச்சே! இருக்காது சார்! அவன் தன் மனைவி மக்கள் வயிற்றைக் கழுவ ஒரு வேலை கிடைக்காதா என்று எங்காவது சுற்றிக் கொண்டிருப்பான்".

"அது சரி...ரோஹிணி என்ற பெண்ணை ராத்திரி கொலை செய்து விட்டார்களே தெரியுமா உங்களுக்கு?" என்று இருந் தாற் போலிருந்து எதிர்பாராத இந்தக் கேள்வியைத் தூக்கிப் போட்டார் பீதாம்பரம்.

இதைக் கேட்டதும் கோபி அசந்து விடுவார் என்று எண் ணிய பீதாம்பரம் ஏமாந்து விட்டார். கோபி வெகு நிதான மாகவே பதிலளித்தார். "ஆமாம், காலையில் பத்திரிகையில் பார்த் தேன். பாவம், அந்தப் பெண்ணுக்கு வந்து வாய்த்தவன் ஒரு சூதாட்ட வெறி பிடித்தவனுகி விட்டான். அவனை எனக்குத் தெரியும். நல்லவேளை, அந்தப் பயலை விட்டு அவள் ஒதுங்கி விட்டாளென்று நினைத்து ஆறுதல் பட்டேன். ஆனுல் எதிர் பார்த்ததற்கு மாற்றமாக நடந்துவிட்டது. என்ன செய்வது? எல்லாம் விதிப்பயன்" என்று வேதாந்திபோல பேசிக்கொண்டே போனுர் கோபி.

"உங்களுக்கு ரோஹிணியின் கணவனைத் தெரியும் என்கிறீர் களே, எப்படித் தெரியும்?" என்று கேட்டார் பீதாம்பரம்.

"நான் சர்க்கஸ் கம்பெனி வைத்து நடத்தினேனென்று சொன்னேன் பாருங்கள்; அதில் இந்தச் சீட்டாட்டமெல்லாம் வரும். கண்கட்டி வித்தை மாதிரி சீட்டை மறைப்பது, மாற்று வது எல்லாம் எனக்குத் தெரியும். ரோஹிணியின் புருஷன் பெரிய சூதாடியாகையால் என்னிடமிருந்து வித்தைகளைக் கற் றுக் கொண்டு மோசடி மூலம் சீட்டாட்டத்தில் வெற்றியடைய லாம் என்று முயற்சி செய்தான். ஆனுல் நான் அவனுக்கு போக்குக் காட்டிக் கொண்டுவந்து ஒன்றும் சொல்லிக் கொடுக்கா மலிருந்து விட்டேன். அந்தக் காலத்தில் முனிவர்களின் ஆசிரமங் களிலிருந்த சிஷ்யர்கள் குருவுக்கு சகல பணிவிடைகளும் செய் வதுபோல என்னிடமும் சீட்டாட்ட வித்தையைக்கற்றுக்கொள்ள என்னை எப்படி எப்படியெல்லாமோ குளிப்பாட்டினுன். நான் எதற்கும் மசிந்து கொடுக்கவில்லை. அவன் படுத்திய பாட்டுக்கெல் லாம் வளைந்து கொடுத்தாள் ரோஹிணி. அட்டை ரத்தத்தை உறிஞ்சுவதுபோல அவள் பணத்தைப் பறித்து நாசமாக்கிக் கொண்டே வந்தான். நல்லவேளையாக அவர்களிருவரும் சண்டை யிட்டுக் கொண்டு பிரிந்தார்கள். இப்போது சுந்தரமூர்த்தி பஞ்

சத்தில் அடிபட்ட நாய்போல காய்ந்து கிடக்கிருன். இருந்தாலும் பழைய கௌரவம் போகவில்லை. என்னமோ 'கதை எழுதுகிறேன் கதை எழுதுகிறேன்' என்று சொல்லிக் கதை பண்ணுகிருன்" என்று சுந்தரமூர்த்திமேல் ஒரு நீண்ட குற்றப் பத்திரிகையையே படித்தார் கோபி.

இவை யெல்லாவற்றையும் கவனமாகக் கேட்டுக் கொண்டே வந்த பீதாம்பரம்,

"மிஸ்டர் கோபி! நீங்கள் ஒரு உதவி செய்யவேண்டும். இப்போதே சுந்தரமூர்த்தியிடம் நம் சுகுமாரனை அழைத்துக் கொண்டு செல்லுங்கள். இவன் ஒரு பிரபல புத்தகம் வெளியிடும் கம்பெனியின் பங்குதாரர். பெரிய எழுத்தாளர் என்று அவனிடம் சுகுமாரனை அறிமுகம் செய்துவையுங்கள். பிறகு நடக்க வேண்டியதை சுகுமாரன் கவனித்துக் கொள்வான்" என்ருர். சரியென்று தலையை ஆட்டிய கோபி,

"நாராயணனை எங்காவது பார்த்து நீங்கள் பிடித்துக் கொண்டால் கூட அவனைத் தொந்தரவு செய்யக்கூடாது. அதைச் சொல்லிவிட்டுப் போகத்தான் வந்தேன்" என்று கூறிக் கொண்டே சுகுமாரனுடன் வெளியேறினுர்.

---

## 5. போலி எழுத்தாளன்!

---

கோபியுடன் புறப்பட்ட சுகுமாரன் சிந்தித்துக் கொண்டே சென்ருன். சுந்தரமூர்த்தியிடம் அவன் பேச்சுக் கொடுக்க வேண்டிய விதத்தையெல்லாம் வழிநெடுகக் கற்பனை செய்து கொண்டான். இருவரும் ஒரு பெரிய கட்டிடத்துக்கு முன்வந்து நின்ருர்கள். அது ஒரு பெரிய விடுதி. வாடகைக்கு அறைகள் விடும் இடமாகவும் சாப்பாட்டு விடுதியாகவும் உள்ளது அது. இரண்டு மூன்று மாடிகளைக் கடந்து சென்றனர். நான்காவது மாடியில் வலது கோடியில் ஓர் அறையின் முன்பு ஐந்தாறு பேர் கூடி உட்கார்ந்து சீட்டாடிக் கொண்டிருந்தனர். அவர்களில் ஒருவன் கோபியைக் கண்டதும் எழுந்து வந்தான்.

"சுந்தரமூர்த்தி! உன் சீட்டாட்ட வேலைக்கு ஒரு முழுக்குப் போட வைப்பதற்காக இவரைக் கூட்டிக் கொண்டு வந்திருக்கிறேன். இவர் புத்தகம் வெளியிடும் வெண்தாமரைப் பதிப்பகத்தின் பங்குதாரர். பெரிய எழுத்தாளரும் கூட. 'ஆடிய பாதம்' என்று பெயர். உன் கற்பனைக் களஞ்சியங்களை இவரி

டம் கொடு. புஸ்தகமாகப் போட ஏற்பாடு செய்வார்" என்ருர் கோபி.

இதைக் கேட்டதும் சந்தோஷத்தோடு கோபியின் கைகளைப் பிடித்துக் குலுக்கு குலுக்கு என்று குலுக்கினன் சுந்தரமூர்த்தி. தன் அறைக்குள் அவர்களை அழைத்துச் சென்று வேண்டிய உபசாரங்களைச் செய்தான். கடைசியில் இரண்டு மூன்று கத்தைக் கையெழுத்துப் பிரதிகளைக் கொண்டு வந்து சுகுமாரனுக்கு முன்னல் போடப்பட்டிருந்த மேஜையின் மீது வைத்தான்.

"இவைகளை எழுத நான் ரொம்பக் கஷ்டப்பட்டேன் ஸார்! இதோ இருக்கிறது பாருங்கள்; இது, இழந்தகாதல். உள்ளத்தை உருக்கும் சோகமயமான கதை. அதற்குக் கீழே இருப்பது ஒரு ஹாஸ்யக் களஞ்சியம். வரிக்கு வரி, எழுத்துக்கு எழுத்து சிரிப்பை உண்டாக்கும் நகைச்சுவைக் குவியல். அதற்குக் கீழே இருப்பது லைலா மஜ்னு பாணியில் எழுதப்பட்ட ஒப்பற்ற காதல் நவீனம்" என்று தன் சிருஷ்டியின் மகத்துவங்களை அளந்து கொண்டே போனன். சுகுமாரனுக்குப் போதும் போதும் என்ருகி விட்டது. விட்டால் போதும் என்ற நிலையில், விடை பெற்றுக் கொள்ளும் தோரணையில், எழுந்து நின்ருன்.

"மூன்று கதைகளையும் எடுத்துக் கொண்டு போகிறேன். படித்துப் பார்த்து விட்டுச் சொல்லுகிறேன்" என்று அடக்கமாகச் சொல்லிவிட்டு நடையைக் கட்டத் தயாரானன் சுகுமாரன். சுந்தரமூர்த்தி அவ்வளவு சீக்கிரத்தில் அவர்கள் இருவரையும் வெளியேவிடத் தயாராயில்லை. சுகுமாரனின் விலாசம் முதல் கொண்டு குறித்துக்கொண்டுதான் அனுப்பினன்.

விடுதியை விட்டு வெளியே வந்ததுமே கோபி விடைபெற்றுக் கொண்டார். சுகுமாரன் பீதாம்பரத்தைத் தேடிப் போலீஸ் ஸ்டேஷனுக்குச் சென்ருன். தாலி கட்டிய மனைவி கொலை செய்யப்பட்டு விட்டாள். அந்தச் செய்தி பத்திரிகைகளில் ஒன்று விடாமல் பிரசுரமாகியிருக்கிறது. அதை அவசியம் சுந்தரமூர்த்தி படித்திருக்க வேண்டும். இருந்தும் அவன் முகத்தில் சிறிதுகூட துக்கத்தின் சாயலே இல்லை. இவனே ஏன் ரோஹிணியைக் கொன்றிருக்கக் கூடாது என்று நினைத்துக் கொண்டான் சுகுமாரன்.

போலீஸ் ஸ்டேஷனில் பீதாம்பரம் யாரோ ஒரு நபரை விசாரணை செய்துகொண்டிருந்தார். விசாரணையின் தோரணையிலிருந்து அவன்தான் நாராயணன் என்று புரிந்து கொண்டான் சுகுமாரன். டாக்டர் விமலநாதன் கொலை செய்யப்பட்ட இரவு நாராயணன் எங்கிருந்தான் என்ற கேள்வியையே திரும்பத் திரும்பக் கேட்டுக் கொண்டிருந்தார் பீதாம்பரம்.

"பதினொரு மணிக்கெல்லாம் எனக்கு வயிற்று வலி வந்தது. டாக்டர் கைலாசத்திடம் சென்றேன். அவரிடம் மருந்து வாங்கிச் சாப்பிட்டு விட்டுவந்தேன்" என்று நாராயணன் தான் சொன்ன பதிலையே திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருந்தான்.

"பொய் சொல்லுகிறாய். டாக்டர் வீட்டுக்குப் பதினொரு மணிக்குச் சென்ற நீ, வீடு திரும்ப இரண்டு மணிக்குமேல் எப்படி ஆயிற்று?" என்று கோபத்தோடு கேட்டார் பீதாம்பரம்.

"மருந்து சாப்பிட்டுவிட்டு வெளியே வந்தேன். காலையில் சாப்பாடு சாப்பிட்டது, பகல் பூராவும் ஒன்றுமே சாப்பிடவில்லையாகையால் பசி மயக்கத்தில் டாக்டர் வீட்டுத்திண்ணையில் படுத்துவிட்டேன். பிறகு எனக்கு உணர்வு வந்து நானாக எழுந்தேன். டாக்டர் வீட்டுத்திண்ணையிலேயே தூங்கிவிட்டது அப்போது தான் தெரிந்தது. பின்னர் வீட்டுக்கு வந்துசேர்ந்தேன்" என்றான் நாராயணன்.

இதைக் கேட்டுக் கட கடவென்று சிரித்துவிட்டார் பீதாம்பரம். "பொருந்தும்படியாக பொய்யுக்குக் கண்ணும் மூக்கும் வைத்து அழகாகப் பேசுகிறாயே, நாராயணா" என்றார்.

தான் சொல்லுவதெல்லாம் சத்தியம் என்று தலைமேலடித்துச் சொன்னான் நாராயணன். குறிப்பறிந்து நடக்கும் சுகுமாரன் நேரே டாக்டர் கைலாசத்தின் வீட்டுக்கு ஓடினான். நாராயணன் கூறியதில் எவ்வளவு மெய்யிருக்கிறது என்பதைத் தெரிந்து கொள்ள அவனுக்கு ஆசை.

துப்பறியும் பீதாம்பரம் என்ன நினைத்தாரோ தெரியவில்லை. நாராயணனை வீட்டுக்கு அனுப்பும்படி இன்ஸ்பெக்டரிடம் சொன்னார். ஆரம்பம் முதல் எல்லோரையும் வீட்டுக்கு அனுப்பும்படியே பீதாம்பரம் சொல்லிக் கொண்டு வருவது ஏகாம்பரத்திற்கு ஆச்சரியமாகிக் கொண்டே வந்தது. காரணமில்லாமல் பீதாம்பரம் எதையும் செய்ய மாட்டாரென்று அவருக்கு ஒரு பெரிய நம்பிக்கையிருந்தது. நாராயணனுக்குப் போக்குக்காட்டி, சந்தர்ப்பம் பார்த்து அவனை மடக்கிக் கொள்ளவே இந்தத் தந்திரத்தைச் செய்கிறார் என்று இன்ஸ்பெக்டர் யூகித்துக் கொண்டார்.

நாராயணனுக்குச் சிகிச்சை செய்த டாக்டர் வீட்டுக்குச் சென்று விட்டுத் திரும்பி வந்தான் சுகுமாரன்.

"டாக்டர் சொல்லுவதைப் பார்த்தால் நாராயணன் மீது சந்தேகிக்க இடமில்லை, ஸார்!" என்றான்.

"அப்படி என்ன நம்பும்படி சொல்லி விட்டார்?" என்று கேட்டார் பீதாம்பரம்.

"நேற்று முன் தினம் இரவு பதினொரு மணிக்குத் தனக்கு வயிற்றுவலி என்று நாராயணன் டாக்டரைப் பார்க்கச் சென்றானும். அவரும் மருந்து கொடுத்து அனுப்பிவிட்டாராம். பிறகு சிறிதுநேரம் கழித்துக் கதவைத் திறந்து கொண்டு வெளியேவந்து பார்த்தாராம் டாக்டர். நாராயணன் அவர் வீட்டுத் திண்ணையிலேயே தூங்கிக் கொண்டிருந்தானும்."

சுகுமாரன் மேலும் தொடர்ந்து சொன்னது பீதாம்பரத்தைச் சிந்திக்க வைத்து விட்டது.

டாக்டர் கைலாசமும் விமலநாதனும் பால்ய நண்பர்களாம். இருவரும் ஒன்றுகவே படித்தனராம். ஒரே தொழிலிலேயே ஈடுபட்டனராம். ஈடு இணையில்லாமல் பல வருடங்களாகப் பழகிய அவர்கள் இருவரும் சமீபத்தில் சில வருடங்களாகப் பேசுவது கூட இல்லையாம். நாராயணனுக்காக டாக்டர் கைலாசம் தம் நண்பர் விமலநாதனிடம் எவ்வளவோ போராடிப் பார்த்து விட்டு கடைசியில் ஒன்றும் நடக்காமறபோகவே விலகிக் கொண்டார். இந்த விஷயங்கள் பீதாம்பரத்துக்குப் பெருத்த யோசனையாகி விட்டது. உண்மையில் வேறு எதற்காகவோ இரண்டு டாக்டர்களுக்கும் ஏதாவது விரோதம் இருந்து, அந்தக் கோபத்தில் டாக்டர் கைலாசமே, விமலநாதனைக் கொன்றிருப்பார் என்று ஏன் முடிவு செய்யக்கூடாது......? இதைத் தொடர்ந்து வேருெரு சந்தேகமும் எழுந்தது. ரோஹிணி கொலை செய்யப்படுவதற்கும் டாக்டர் காரணமாயிருக்கலாமோ......?

டாக்ட்ரைப் பற்றி மேலும் விவரங்கள் சேகரிக்கவேண்டுமென்று முடிவு செய்து கொண்டு சுகுமாரன் பக்கம் திரும்பினுர்.

"சுகுமாரா! எழுத்தாளர் சுந்தரமூர்த்தியின் கதைகளை இப்படிக் கொடு பார்க்கலாம்" என்றுர்.

"அது எதற்கு ஸார் தலைவலி? எழுத்தைப் பிழைப்பாக வைத்திருக்கிறவனும் எழுத்தில் பழக்கமுள்ளவனும் எழுதியிருந்தால் பரவாயில்லை. இவன் ஒரு சூதாடி. எழுதுவது நாகரிகம் என்று எண்ணிக்கொண்டு, தன் சூதாடி மனதிலிருந்ததை வாந்தியெடுத்திருக்கிறுன்" என்று சொல்லிக்கொண்டே, தன் கைப் பையில் வைத்திருந்த சுந்தரமூர்த்தியின் கதைகளை எடுத்துக் கொடுத்தான் சுகுமாரன்.

முதல் கதையின் ஆரம்பம் ஒன்றிரண்டு வரிகளைப் படித்து விட்டு, 'டக்'கென்று மூடிவைத்து விட்டார் பீதாம்பரம். சற்று நேரம் தலையைப் பிடித்துக் கொண்டு யோசித்தவாறு இருந்து விட்டு சுகுமாரனை நோக்கினுர்.

"சுகுமார்! இன்று ஏகாம்பரம் மேற்கொண்டும் கொஞ்சம் தகவல் கொண்டு வந்திருக்கிருர். சுந்தரமூர்த்தி ரோஹிணியை விட்டுப் பிரிந்து விட்டாலும் அடிக்கடி அவளிடம் சென்று பணம் பறித்துக் கொண்டேயிருந்தாஞம். அவனைக் கண்டு அஞ்சி நடுங்கிச் செத்துக் கொண்டேயிருந்தாளாம் ரோஹிணி. எனக்கு அவன் மேல் என்னமோ சந்தேகமாய்த்தானிருக்கிறது. ரோஹிணி அவனை விட்டுப் பிரிந்த பிறகும் எதற்காக அவள் அவனுக்குப் பயப்படவேண்டும்...அப்படி அவன் எதைவைத்துக் கொண்டு அவளைப் பயமுறுத்திஞன் என்பதை நாம் முதலில் தெரிந்து கொள்ள வேண்டும். இது பற்றிச் சுந்தரமூர்த்தியை நேரிலேயே விசாரணை செய்தால் ஒன்றும் பதில் வராது. ஆகையால் அவன் அறையை ரகசியமாகச் சோதனை போடவேண்டும்" என்ருர் பீதாம்பரம்.

"வரதன் தான் ரோஹிணியைக் கொன்ருன். ஆகவேதான் அவன் பயந்து கொண்டு தற்கொலை செய்துகொண்டான் என்று செய்திருந்த முடிவு......" என்று இழுத்தான் சுகுமாரன்.

"அது தனியே ஆராயவேண்டிய விஷயம். இப்போது சுந்தரமூர்த்தி விஷயம் நமக்குத் தெரியவேண்டும். அதற்கு என்ன செய்ய?"

"இவ்வளவு தானே ஸார்! நான் அதற்கு ஒரு தந்திரம் செய்கிறேன். இன்று இரவு பதிஞெரு மணிக்கெல்லாம் அவனை இங்கு வரச் செய்கிறேன். திடுதிப்பென்று அப்போதுதான் நாம் ஆளை அனுப்பி அவனை வரவழைக்க வேண்டும். வீட்டுக்கு வரச் செய்து அவன் கதைகளைப் பற்றிப் பேசிப் பொழுதைப் போக்கு கிறேன். நீங்கள் அதற்குள் அவன் அறைக்குச் சென்று உங்கள் ஆராய்ச்சியை முடித்துக் கொள்ளலாம்" என்று உற்சாகத்தோடு கூறிஞன் சுகுமாரன்.

சுகுமாரஞ இவ்வளவு பிரமாதமான யோசனையைச் சொன்ஞன் என்று ஆச்சரியத்தோடு அவனைப் பார்த்தார் பீதாம்பரம்.

"சபாஷ் சுகுமாரா! உன் திட்டம் அபாரம். இன்று உன் யோசனைப்படியே ஏற்பாடுகளைச் செய்" என்று சொல்லிவிட்டு எழுந்து வெளியே சென்ருர்.

இரவு பதிஞெரு மணி. சுகுமாரன் ஏற்கெனவே திட்டமிட்டபடி சுந்தரமூர்த்திக்கு ஒரு கடிதம் எழுதி ஓர் ஆள் வசம் கொடுத்தனுப்பிஞன். தனக்கு அப்போதுதான் ஓய்வு கிடைத்ததென்றும், அப்போது தன் வீட்டுக்கு வந்தால் அவனுடைய கதைகளைப் பற்றிப் பேச வாய்ப்புக்கிடைக்குமென்றும் கடிதத்தில் எழுதியிருந்தான். பீதாம்பரமும் சிறிது நேரத்தில் வெளியே புறப்பட்டுச் சென்று விட்டார்.

வீட்டில் உட்கார்ந்து கொண்டிருந்த சுகுமாரன் நிமிஷங்களை எண்ணிக் கொண்டிருந்தான். சுந்தரமூர்த்தி வந்தால் அவனிடம் எப்படியெல்லாம் பேச்சுக்கொடுத்து அவனை உட்கார வைக்க வேண்டுமென்று கற்பனை செய்து கொண்டு ஹாலில் அங்குமிங் கும் உலவிக் கொண்டிருந்தான். சிறிது நேரத்தில் கதவு தட் டப்படும் சப்தம் கேட்டது. விரைந்து சென்று கதவைத் திறந் தான் சுகுமாரன். சிரித்தபடியே சுந்தரமூர்த்தி உள்ளே நுழைந் தான். சுகுமாரன் முகத்தில் சிரிப்பை வரவழைத்துக் கொண்டு அவனை வரவேற்றான். இருவரும் இரண்டு நாற்காலிகளில் உட் கார்ந்து கொண்டனர்.

"நீங்கள் இவ்வளவு சீக்கிரத்தில் என் நாவல்களைப் படித்து விடுவீர்கள் என்று நான் நினைக்கவேயில்லை......எப்படி ஸார் இருக்கிறது என் நாவல்கள்?" என்று ஆவலோடு கேட்டான் சுந்தரமூர்த்தி.

"ரொம்பப் பிரமாதமாயிருக்கிறது. உங்களுக்கு எழுத்துத் தொழில் ஆரம்பம் தான் பாருங்கள். கொஞ்சம் மாற்றங்கள் செய்து விட்டால் மூன்று நாவல்களும் மூன்று மாணிக்கம்தான், போங்களேன். அது பற்றித்தான் உங்களிடம் பேசலாமென்று உங்களை இந்த அர்த்தராத்திரியில் அழைத்தேன். எனக்கு இப்போதுதான் ஒழிகிறது. இந்த அகால வேளைகளில் உங் களைத் தொந்தரவு செய்து விட்டதற்காக வருத்தப்பட்டுக் கொள்ள மாட்டீர்களே?" என்று விடாமல் பேசிக் கொண்டே போனான் சுகுமாரன்.

"அதெல்லாம் ஒன்றுமில்லைங்க. இன்று விடிய விடிய இங்கேயே இருக்கச் சொன்னால்கூட நான் இருக்கத் தயாராயிருக் கிறேன்" என்று உற்சாகத்தோடு கூறினான் சுந்தரமூர்த்தி. இப்போதுதான் மூச்சுவிட முடிந்தது சுகுமாரனால்.

சுந்தரமூர்த்தி தங்கியிருந்த விடுதியின் மாடிப்படிகளில் ஏறி வெகு இரகசியமாகப் பதுங்கிச் சென்றார் பீதாம்பரம். நான்காவது மாடி வந்ததும் சுகுமாரன் சொன்ன அடையாளப்படி சுந்தர மூர்த்தி அறையின் முன்னால் போய் நின்று கொண்டார். தம்மை யாராவது கவனிக்கிறார்களா என்று சுற்று முற்றும் பார்த்தார். நல்ல வேளை! யாரும் அவர் கண்ணுக்குத் தென்படவில்லை. இரண்டு மூன்று சாவிகளால அறைக் கதவின் பூட்டைத் திறக்க முயற்சி செய்து கடைசியில் வெற்றியடைந்தார்.

அறைக்குள் சென்று உட்பக்கமாகத் தாளிட்டுக் கொண்டு கையில் வைத்திருந்த டார்ச்சை ஏற்றி தம் ஆராய்ச்சியைத்

துவக்கினர் பீதாம்பரம். ஒரு மூலையில் சிறியமேஜை ஒன்றின்மீது ஒரு டைப்ரைட்டர் வைக்கப்பட்டிருந்தது. விறு விறுவென்று அதை நோக்கிச்சென்று உற்றுக் கவனித்தார். அவர் எதை நினைத்து அந்த டைப்ரைட்டரை நோக்கி வந்தாரோ அது சரியா யிருந்தது. டைப்ரைட்டரிலுள்ள எழுத்துக்கள் மட்டும் புதி தாகச் சேர்க்கப்பட்டிருந்தன. மேஜையைத் திறந்து பார்த்தார். உள்ளே டைப் அடிக்கப்பட்டிருந்த இரண்டு மூன்று காகிதங்கள் கிடந்தன. சற்று தேய்ந்த எழுத்தில் டைப் செய்யப்பட்டிருந்த அக்கடிதங்கள் பீதாம்பரத்தின் சந்தேகத்தை மேலும் வளர்த் தன. பயங்கரங்களை விளைவிக்க உதவிய டைப் அடிக்கப்பட்ட சீட்டுகளும் பழைய எழுத்துக்களுள்ள டைப்ரைட்டரிலேயேதான் அடிக்கப்பட்டிருந்தது. எனவே சந்தேகத்துடன் அந்தக் காகிதங்களை எடுத்துப் பசக்கென்று சட்டைப் பைக்குள் திணித்துக் கொண்டு மேலும் தம் ஆராய்ச்சியைத் துவக்கினர். சுவரோடு ஓர் அலமாரி பதிக்கப்பட்டிருந்தது. அதைத் திறக்கச் சிறிது கஷ்டப்படவேண்டியிருந்தது. உள்ளே கீழ்த்தட்டில் புஸ்தகங்களும், மேல் தட்டில் துணிகளும் இருந்தன. புஸ்தகக் கும்பலில் ஒரே ஒரு புஸ்தகம் வெளியே நீட்டிக் கொண்டிருந்தது. அதை வெகு கஷ்டப்பட்டுப் புதிதாகத் திணித்திருப்பது போல் தெரிந்தது. 'படக்'கென்று அதை வெளியே எடுத்துப்பார்த் தார். பீதாம்பரத்துக்கு ஆச்சரியத்தில் கண்கள் அகலவிரிந் தன. ரோஹிணியின் டயரிதான் அது. விறுவிறுவென்று அதைத்திருப்பிக் கடைசியாக எழுதப்பட்ட தேதியைப்பார்த் தார். நான்கைந்து நாட்களுக்கு முன்பு வரை ரோஹிணி தன் அன்ருட நிகழ்ச்சிகளை அந்த டயரியில் எழுதிவைத்திருந்தாள். டயரியையும் வெகு பத்திரமாகத் தம் கோட்பையில் திணித்துக் கொண்டு அறையின் நாலுபுறங் களையும் நன்ருக ஆராய்ந்தார். வேறு, சந்தேகப்படும்படியான தடயம் ஒன்றும் அகப்படவில்லை. வெளியே வந்து அறையைச் சாத்திக்கொண்டு கிளம்பினர்.

பீதாம்பரம் தம் வீட்டுத் தெருமுனையில் காரைத்திருப்பும் போது வீட்டிலிருந்து இறங்கி ஒருமனிதன் வெளியே வருவதைக் கவனித்தார். அவன் சுந்தரமூர்த்தி தானென்பதை ஊகிக்க அவருக்கு அதிக நேரமாகவில்லை. கைக்கடிகாரத்தைப் பார்த் தார். மணி இரண்டு ஆகிவிட்டது. சுகுமாரனின் திறமையை எண்ணி மனசுக்குள் பெருமைப்பட்டுக் கொண்டார் பீதாம்பரம். சூதாடியின்மனம் எப்போதும் ஒரு நிலையிலிருக்காது என்பார்கள். சூதாட்டத்திலேயே வாழ்க்கையைக் கழித்துவிட்ட சுந்தரமூர்த் தியை இழுத்துப்பிடித்து மூன்று மணி நேரம் உட்காரவைத்து

விட்ட சுகுமாரனுக்குத் துப்பறியும் தொழிலில் ஒரு நல்ல எதிர் காலம் இருக்கிறதென முடிவுசெய்து கொண்டார்.

வீட்டுக்குள் நுழைந்ததும் நுழையாததுமாக எல்லாவற்றையும் விவரித்தார் பீதாம்பரம். டயரி படிப்பதில் அவர் அசிரத்தையாயிருப்பது சுகுமாரனுக்கு என்னவோ மாதிரியிருந்தது.

"சுகுமாரா! இருந்தாற்போலிருந்து எனக்குத் திடீரென்று ஒரு யோசனை வந்தது. கொலை செய்யப்பட்ட ஒவ்வொருவர் அருகிலும் கிடைத்த சீட்டைக்கவனித்தாயா? வி-ரோ-தி என்ற மூன்றெழுத்துக்கள் மட்டும் குறிப்பாக ஒவ்வொரு சீட்டிலும் ஏன் இருக்க வேண்டும்? அதன் பொருள் என்ன? இந்த விவரங்களைத் தெரிந்து கொண்டாலன்றி மேற்கொண்டும் கொலை நடப்பதைத் தவிர்க்க முடியாது" என்றார் பீதாம்பரம்.

"அப்படியானால் சுந்தரமூர்த்தியைக்கூட உங்களால் சந்தேகிக்க முடியவில்லையா, என்ன?" என்று கேட்டான் சுகுமாரன்.

"சுந்தரமூர்த்தியின்மேல் எனக்கு முழுச்சந்தேகம் இருக்கத்தான் செய்கிறது. ஆனால் சுந்தரமூர்த்தி ஒருவன் மட்டுமே இந்தக் கொலைகளைச் செய்கிறான் என்று சொல்லமுடியாது. ஒரு கூட்டமே முன்கூட்டித் திட்டமிட்டு வரிசையாகக் கொலைகளைச் செய்து வருகிறது. எதற்காக இப்படிச் சொல்ல வருகிறேனென்றால் 'விரோதி' என்ற மூன்றெழுத்துக்களையும் தனித்தனியாக வைத்துக் கொண்டுபார்த்தால் தெரியும். 'வி' என்ற எழுத்தை எடுத்துக்கொள். டாக்டர் விமலநாதனின் பெயரின் முதல் எழுத்து. அடுத்தபடியாக 'ரோ' என்ற எழுத்தைப்பார். ரோஹிணி பெயரின் முதல் எழுத்து 'ரோ' வைக்குறிக்கிறது.

"அப்படியானால் 'தி' என்று எழுத்து முதலில் வரும் பெயருடைய இன்னொருவரும் கொலையாகப் போகிறாரா என்ன?" என்று பதறியபடி கேட்டான் சுகுமாரன்.

"ஆமாம். அதைத்தான் முன்கூட்டியே நாம் தடுத்துவிட வேண்டுமென்று சொல்லுகிறேன். 'தி' என்று முதலெழுத்து வரும் பெயர்களுடையவர்களை நாம் உடனே தேடியாக வேண்டும்"

"ஒருவரா இரண்டுபேரா தேடுவதற்கு?"

"ஊரிலுள்ள அத்தனைபேரையுமா தேடவேண்டுமென்று சொல்லுகிறேன். டாக்டர் விமலநாதன், ரோஹிணி இந்த இரண்டு பேருக்கும் சம்பந்தப்பட்ட யாருக்காவது 'தி' என்ற எழுத்து ஆரம்பித்து பெயரிருக்கிறதா என்று பார்க்க வேண்டும். ஏற்கெனவே கொலை செய்யப்பட்ட இருவரும் யாரால் கொலை செய்யப்பட்டார்கள் என்பதை ஓரளவு யூகிக்கமுடிகிறது.

டாக்டரை நாராயணனே கொன்றிருக்க வேண்டும். அப்படி அவன் கொல்லவில்லை யென்று டாக்டர் கைலாசம் கூறுகிறாரே அது உண்மையானால், இன்னொருவிதமாக ஆராய்ந்து பார்க்கலாம். நாராயணனும் சுந்தரமூர்த்தியும் ஒன்று சேர்ந்துயோசித்திருப்பார்கள். விமலநாதனைச் சுந்தரமூர்த்தி கொலை செய்திருப்பான். நாராயணன் ரோஹிணியைக் கொன்றிருப்பான். ஏனென்றால், ரோஹிணி கொலை செய்யப்பட்ட பிறகுதானே நாராயணனைக் கண்டுபிடித்தோம்......"

இடையில் ஒரு சந்தேகம் கேட்டான் சுகுமாரன். "கொலையாளியைக் கண்டுபிடித்துத் தருவதாகவும், அவன் ஹோட்டல் மாயாவிலேயே இருப்பதாகவும் ஹோட்டல் கிளார்க் வைத்தியநாதன் சொன்னாரே; அந்தக் கொலையாளிக்கும் நீங்கள் சொல்லும் இருவருக்கும் வித்தியாசப்படுகிறதே. அவர் சொல்லியதைப் பார்த்தால் அந்த ஹோட்டல் உள்ளே இன்னொரு கொலைகாரன் இருப்பானோ என்று எண்ணத்தோன்றுகிறது. ஆனால் சுந்தரமூர்த்தியோ, நாராயணனோ ஹோட்டல் மாயாவுக்குச் சம்பந்தமில்லாதவர்கள். நீங்கள் சொல்லுகிறபடியே முன் கூட்டியே திட்டமிட்டுச் செய்யப்பட்ட கொலையானால், இன்னொரு கொலை நடக்கப்போகிறதே, அதைச்செய்பவனும் ஒருவன் இருக்கத்தானே செய்கிறான்?"

பீதாம்பரம் வெகுவாக நம்பிக்கொண்டிருந்த முடிவை சுகுமாரனின் இந்தச் சந்தேகங்கள் கெடுத்துவிட்டன. அவனுடைய வாதமும் சரியாய்த் தான் இருக்கிறது. இன்னொரு கொலைகாரன் இருக்கத்தான் வேண்டும். ஆனால் அவன் ஹோட்டலில் உள்ளவன அல்ல. இனிமேல்தான் இவன் கொலைகாரனாகப் போகிறான். வைத்தியநாதன், டாக்டரைக் கொன்றவனைத்தானே காட்டிக் கொடுக்கப்போவதாகச் சொன்னார்? இவ்வாறெல்லாம் சிந்தித்த பீதாம்பரத்துக்கு எதையும் தீர்க்கமாக முடிவு செய்ய முடியவில்லை. ஏதோ ஒருயோசனை திடீரென்று தோன்றியது. திடுக்கென்று எழுந்தார்.

"சுகுமாரா! நீ இங்கேயே இருந்து ரோஹிணியின் டயரியைப் படித்துமுடி. நான் அதற்குள் நாராயணனைக் கண்காணிக்க ஏற்பாடு செய்துவிட்டு வருகிறேன். அதோடு சுந்தரமூர்த்தியின் ஒவ்வொரு நடவடிக்கையையும் மறைமுகமாகக் கவனிக்க வழி செய்கிறேன். ரோஹிணியின் மாமா அடிக்கடி வெளியூர் சென்று விடுவார் என்று வேலைக்காரன் சொன்னான். அவர் வெளியூருக்குச் செல்லுவதாகச்சொல்லிவிட்டுப் பட்டணத்திலேயேதான் ஒளிந்து கொண்டிருக்கிறார் என்று ரோஹிணி தன்னிடம்

சொன்னதாகவும் வேலைக்காரன் சொன்னான். ஆகவே, எனக்கு ரோஹிணியின் மாமாவின் மீதே சந்தேகமாயிருக்கிறது. அவரே ஏன் மூன்றாவது கொலையாளியாக இருக்கக்கூடாது?"

"முதல் இரண்டு கொலையாளிகளையும் உள்ளே அடைத்தால் தானே ஸார் நல்லது?"

"இல்லை. அவர்களை வெளியேவிட்டுத் தான் மூன்றாமவனைப் பிடிக்கவேண்டும். டயரியைக் கவனமாகப்படி. நான் வெளியே போய்விட்டு இரண்டுமணி நேரத்தில் திரும்பி வந்து விடுகிறேன். இதற்குள் அந்த சுந்தரமூர்த்தி திரும்பி வந்தாலும் வருவான். ஏனென்றால் அவன் சூதாடி. ஒரு நிலையிலிருக்காது மனசு. அநேகமாக சூதாட்டக்காரனுக்கும் அடுத்தவனைக் கெடுப்பவனுக்கும் தூக்கமே வராது. சும்மா பொழுதைப்போக்குவதற்காகவாவது உன்னுடன் வந்து பேசிக்கொண்டிருக்கலாமே என்று நினைத்து மூன்றாம் சாமத்தில் வந்து கதவைத் தட்டுவான். அவனிடம் பக்குவமாக நடந்துகொள். தெரிகிறதா?" என்று சொல்லிவிட்டு வெளியே நடந்தார் பீதாம்பரம்.

சுகுமாரன் டயரியைப் புரட்டினான். ரோஹிணியின் கையெழுத்து முத்து முத்தாகயிருந்தது. பெண்களின் கையெழுத்து கோழிகிண்டியது போலிருக்கும் என்ற ஏகோபித்த அபிப்பிராயத்துக்கு முற்றும் மாறாக இருந்தது அவளுடைய கையெழுத்து. டயரியை மேல் நோக்காக ஒரு முறை "விர்" ரென்று திருப்பினான். இரண்டொரு இடங்களில் சிவப்பு மையால் ஏதோ எழுதப்பட்டிருந்தது. 'டக்' கென்று தன் பார்வையைச்செலுத்தி சிவப்பு மையால் ஓரத்தில் எழுதியிருக்கும் விஷயத்தைக் கவனித்தான்.

"உனக்கும் உன் மாமனுக்கும் சேர்த்தே உலை வைக்கிறேன்" என்று எழுதப்பட்டிருந்தது. கையெழுத்து வேறுபட்டிருந்தது. சுகுமாரனுக்கு ஒரு சந்தேகம். விறுவிறு வென்று எழுந்து சென்று அலமாரியைத் திறந்து சுந்தரமூர்த்தியின் கையெழுத்துப் பிரதிகளை எடுத்து அந்த எழுத்தை, டயரியில் எழுதப்பட்டிருந்த சிவப்புமை எழுத்துடன் ஒத்திட்டுப்பார்த்தான். வளைவு சுளிவுகள் புள்ளிகளெல்லாம் கூட ஒத்திருந்தன. பீதாம்பரம் போட்ட புள்ளி சிறிதும் தவறவில்லை என்பதை எண்ணும்போது சுகுமாரனுக்கு ஆச்சரியமாயிருந்தது.

## 6. அறையைத் திறக்கக்கூடாது!

ரோஹிணியின்பங்களாவுக்குச்சென்று காம்பௌண்டுச்சுவர் வழியாக ஏறிக்குதித்து உள்ளே புகுந்து தலைவாசல் கதவைப்

படபடவென்று தட்டினர் பீதாம்பரம். அங்கு ரோஹிணியும் அவள் மாமாவும் இல்லையாகையால் ஒரே ஒரு வேலைக்காரனை அந்த அப்பாவி எந்த மூலையில் சுருண்டு படுத்துத்தூங்கு கிருனே என்று எண்ணிக்கொண்டு மேலும் உரக்கத்தட்டினர். கொஞ்சநேரத்துக்குப் பிறகு வேலைக்காரன் கதவைத்திறந்தான். இராத்திரி மூன்றரை மணிக்குவந்து கதவை இடித்துக்கொண்டிருந்த பீதாம்பரத்தைக் கண்டதும் வேலைக்காரனுக்குத் தூக்கி வாரிப்போட்டது.

"என்னங்க இது? இந்த அகால வேளையிலே?" என்று பதறிக்கொண்டு கேட்டான்.

"உங்கள் எஜமான் வந்து விட்டாரா?" என்று கேட்டார் பீதாம்பரம்.

"அவர் எங்கேங்க இப்ப வரப்போருரு. சமீபத்திலேதானே வெளியூருக்குப் போனரு."

"அவர் எந்த ஊருக்குப் போயிருக்காருன்னு உனக்குத் தெரியுமா?"

பீதாம்பரத்தின் கேள்வியை அரையும் குறையுமாகக் கேட்டுக் கொண்டிருந்த வேலைக்காரனின் முகம் சட்டென்று வெளியே நோக்கியது. மறு நிமிஷம், "என்னங்க? அது யாரு அங்கே? சுவரேறிக் குதிச்சுப் போறது யாரு? உங்க கூட வந்தவங்களா?" என்று அலறிக் கொண்டே கேட்டான்.

பீதாம்பரம் சற்றும் தாமதியாமல் வேலைக்காரன் சுட்டிக் காட்டிய இடத்தை நோக்கி டார்ச்சை அடித்தார். யாரோ பெண் ஒருத்தி காம்பௌண்டுச் சுவரிலிருந்து 'தொப்'பென்று தெருவில் குதித்தாள். பீதாம்பரம் அந்த இடத்தை நோக்கி ஓடினர். தாமும், சற்று முன்பு தெருவில் குதித்த உருவத்தைப் போலவே, சுவரேறித்தாண்டிக் கொண்டு தெருவில் வந்து நின்ருர். ஆனல் என்ன மாயம்? சிறிது நேரத்துக்கு முன் தம் கண்ணுரக்கண்ட அந்தப்பெண்ணைக் காணவேயில்லை. பக்கத்தில் சந்து பொந்துகள் அதிகம். இதில் எங்கு சென்று தேடுவது? இருட்டு வேறு கருங்கும்மென்றிருந்தது. இதற்குள் வேலைக் காரனும் அவரருகில் வந்து விடவே; அவனிடம் பக்கத்துச் சந்து வழியாகத் தேடிப் பார்க்கும்படி சொல்லிவிட்டு பீதாம்பரம் மற்ருெரு சந்தின் வழியாக ஓடினர்.

வெவ்வேறு சந்துகளின் வழியாகச் சென்ற பீதாம்பரமும் வேலைக்காரனும் சிறிது நேரத்துக்கெல்லாம் அடுத்து இருந்த

பெரிய தெருவில் சந்தித்தனர். இருவரும் தோல்வியை மடியில் கட்டிக்கொண்டது தான் மிச்சம். பீதாம்பரம் பங்களாவை நோக்கி நடந்தார்.

"ஏம்பா, உன் பெயர்......?"

பயத்தால் ஆடிப்போயிருந்த வேலைக்காரன் சற்று சிரமப் பட்டான். "ராமசாமிங்க......ஏங்க, வீட்டிலே ஏதாவது திருட்டு கிருட்டு நடந்திருக்குமோ?" என்று கேட்டான்.

"அதெல்லாம் ஒன்று மிருக்காது ராமசாமி. நீ எதற்கும் பயப்படாதே. இவர்களெல்லாம் பணம் காசைத் திருடவரவில்லை. எங்களிடமிருந்து ஏதோ ஒரு பெரிய ரகசியத்தைத் திருடித் திருடி எங்கெங்கேயெல்லாமோ பதுக்கிவைக்கிறார்கள், ஆனால் ஒரு இடமாவது பத்திரமானதாயில்லை அவர்களுக்கு" என்று சொன்னார் பீதாம்பரம்.

ரோஹிணி கொலை செய்யப்பட்ட விவரம் தெரிந்தும் கவலைப் படாத ராமசாமி, வீட்டில் திருட்டுப் போய் விடுவது பற்றி ஏன் இப்படி அலறவேண்டும்? இதை நினைத்தபோது ராமசாமி மீதும் பீதாம்பரத்துக்குச் சந்தேகம் விழுந்தது. அதைத் தொடர்ந்து மாடியிலுள்ள ஓர் அறையைத் திறக்க, ராமசாமி அனுமதிக்க மறுத்ததும் அவர் கவனத்துக்கு வந்தது. எஜ மானின் சதித்திட்டத்தில் ராமசாமிக்கும் பங்கு உண்டோ என்று எண்ணத்தோன்றியது பீதாம்பரத்துக்கு.

ராமசாமியை எதிர்பார்க்காமல் மூன்றாவது மாடிக்குச் சென்று கொண்டிருந்தார் பீதாம்பரம். அவர் குறிக்கோளெல் லாம், ராமசாமி திறந்து விட மறுத்த ரோஹிணியின் மாமா வுடைய அறையைச் சோதனையிடுவதாகத் தானிருந்தது. எதற் காகவோ அங்கு வந்தவர் இப்படிப் புதுமுயற்சியில்ஈடுபட முனைந் தது பீதாம்பரத்துக்கே ஆச்சரிய மாயிருந்தது. அவரைப் பின் தொடர்ந்து வந்துகொண்டிருந்த ராமசாமிக்கு ஒன்றுமே புரியவில்லை. அவர் போலீஸ் சம்பந்தப்பட்டவர், அவரிடம் கண்டிப்பாகப் பேசவும் அவனுக்குப் பயமாயிருந்தது. நேற்று மாடியிலிருந்து வரதன் விழுந்து செத்ததற்குப் பீதாம்பரமே காரணமாயிருந்தும் அவரைக்கொலையாளி என்று குற்றம் சாட்ட யாருக்குமே துணிச்சல் வராமலிருக்கும்போது, இதற்காக நாம் போய் என்ன கண்டிக்க முடியும் என்று எண்ணிக் கொண்டே நடந்தான்.

எந்த அறையைப் பிடிவாதமாகத் திறக்க வேண்டுமென்று நினைத்துக் கொண்டு சென்றாரோ அந்த அறைக்கு முன் வந்து

நின்றதும் பேயறைந்தவர் போலாகி விட்டார். விரியத் திறந்து கிடந்திருந்தது அந்த அறை. உள்ளே டார்ச்சை அடித்துப் பார்த்தார். சாமான்களெல்லாம் தாறுமாருக இறைந்துகிடந்தன. விறுவிறுவென்றுஉள்ளேசென்றுசுவிட்சைத்தட்டினர்.கண்ணை மூடித்திறப்பதற்குள் அந்த அறையெங்கும் பிரகாசமாய் ஜொலித்தது. அலங்கோலமாகக் கிடந்த சாமான்களை உற்றுநோக்கிக் கொண்டே வந்தவர், கண்ணுடி உடைந்து கீழேகிடந்த போட்டோ ஒன்றைக் கண்டதும் அதைச் சற்று உன்னிப்பாகப் பார்த்தார். இரண்டு பெண்களுடைய படம் அது. இரண்டு பேருமே பீதாம்பரத்துக்குத் தெரிந்தவர்கள். ஒருத்தி ரோஹிணி, மற்ருெருத்தி......? ஆமாம். அவள் அன்று ரோஹிணியுடன் ஹோட்டல் மாயாவுக்கு வந்த இரண்டு பெண்களில் ஒருத்தி. மனோஹரனின் மனைவி புஷ்பா. சுமார் ஐந்து வருஷங்களுக்கு முன்பு பிடிக்கப்பட்ட படம் என்று ரோஹிணியின் முகஜாடையை வைத்துக் கொண்டு முடிவு செய்தார் பீதாம்பரம்.

"இந்த அம்மாள் மனோஹரனின் சம்சாரம் தானே?" என்று பக்கத்தில் நின்று கொண்டிருந்த வேலைக்காரனிடம் கேட்டார்.

"அது யாருங்க அது மனோஹரன்? இந்த அம்மாவை இதுக்கு முந்தி நான் பார்த்ததேயில்லீங்களே" என்ருன் ராமசாமி.

ராமசாமி பெரிய பெரிய ரகசியங்களைத் தம்மிடமிருந்து மறைத்துப் பேசுகிருன் என்று நினைத்தார் பீதாம்பரம்.

"ராமசாமி! இந்தமாதிரி தெரிஞ்ச விஷயத்தையெல்லாம் தெரியாதது மாதிரி பாசாங்கு செய்தால் தண்டனை என்ன தெரியுமா? இது சாதாரண விஷயமில்லை. இந்தப் பெண் யார்? மனோஹரனின் மனைவியா? இல்லை......?" என்று கண்டிப்பாய்க் கேட்டார்.

"சத்தியமாத் தெரியாதுங்க. இந்தப் படத்தையே நான் இப்பதானுங்க பார்க்கிறேன். இங்கே வேலையிலே சேர்ந்து நாலு வருஷத்துக்கப்புறம் இன்னிக்குத்தான் இந்த அறையிலேயே காலை வைக்கிறேன்" என்று அழாத குறையாகச் சொன்னுன் ராமசாமி.

இதைக் கேட்டதும் பீதாம்பரத்துக்கு ஒரே ஆச்சரியமாகி விட்டது. "நிஜமாகவா? அப்படியானுல் இங்கே என்ன தான் இருந்தது?"

"தெரியாதுங்க. நான் மட்டுமில்லே. எஜமானைத் தவிர வேறு யாருமே உள்ளே போனதில்லீங்க".

பீதாம்பரத்துக்கு எல்லாமே புதிராயிருந்தது. ராமசாமியைச் சற்றுமுன் சந்தேகித்ததையெல்லாம் மறக்க வேண்டியதுதான் என்று அப்போதே நினைத்து விட்டார்.

ரோஹிணியைக் கூட விடமாட்டார் என்றால் ஏதோ ஒரு ரகசியம் இங்கு இருக்கத்தான் செய்கிறது. "ஆமாம்.........ஏன் ராமசாமி, ரோஹிணிக்கும் உங்க எஜமானுக்கும் ஒத்துப் போகிறதுண்டா?" என்று கேட்டார் பீதாம்பரம்.

"ஐயோ? அதை என் கேக்கிறீங்க? சுந்தரமூர்த்தி ஐயா இருக்கிறவரைக்கும், அம்மாவை அவரிடமிருந்து பிரிக்கிறதுக்கு பெரிய பெரிய வேலையெல்லாம் செய்தாரு. அதுக்குப் பிறகாவது சும்மாயிருந்தாரா? ரோஹிணி அம்மா கூட தினசரி சண்டை தான். அம்மா நடத்தை சரியில்லாததுனாலே தான் சண்டை போடுறதாக என் கிட்டெ சொல்லுவாரு. நானும் அப்ப வெல்லாம் நம்பிக்கிட்டுத்தான் இருந்தேன். ஆனால் இப்பொ தான் அம்மாவோட தங்கமான குணம் தெரியுது. ஒரு வேளை அவரே தான் கொலை செய்திருப்பாரோன்னு கூடச் சந்தேகமா யிருக்குங்க........." என்று இழுத்தாற்போல் கூறினான்.

இத்தனை குணாதிசயங்களுள்ள ரோஹிணியின் மாமாவைத் தாம் நேரில் பார்க்கவில்லை யானாலும் அவர் படத்தையாவது பார்க்க வேண்டுமென்றாலும் சுவரில் எங்குமே போட்டோக்கள் இல்லை.

"ஏன் ராமசாமி! உங்கள் எஜமான் எப்படியிருப்பாரு? அவர் பெயரென்ன?"

"செவப்பா, தாட்டியா, குள்ளமாயிருப்பாருங்க. பேரு கூட வந்து...திருஞானமுங்க" என்று சொன்னான் ராமசாமி.

இந்தப் பதிலைக் கேட்டதும் பீதாம்பரத்துக்குச் 'சொரேர்' என்றது. திருஞானம்...திருஞானம். 'தி' என்ற எழுத்தில் ஆரம்பிக்கும் பெயரை உடையவர். அப்படியானால் இவர் அடுத்த படியாகக் கொலையாகப் போகிறாரா? அடுத்த கொலை திருஞானத்தின் கொலைதானா? 'விரோதி' என்ற பதத்தை இவர் தான் பூர்த்தி செய்யப்போகிறாரா?...பீதாம்பரத்துக்குத் தலை சுற்றியது. 'வி-ரோ-தி' என்ற மூன்றெழுத்துக்களைக் கவனமாகக் கூட்டிப் பார்த்தார்.

வி—விமலநாதன்

ரோ—ரோஹிணி

தி—திருஞானம்

நிச்சயம் அடுத்தபடியாகக் கொலையாகப் போகிறவர் திருஞானமே தான். அவர்தான் மூன்றாவது கொலையாளியாயிருப்பார் என்று அவர் செய்திருந்த முடிவும் தகர்ந்து தவிடு பொடியாகிவிட்டது. இப்போது பிரச்னையெல்லாம் திருஞானத்தைக் கொலையிலிருந்து காப்பாற்றுவது எப்படி என்பதுதான். ராமசாமியின் பக்கம் திரும்பினார் பீதாம்பரம். அவன் முகத்தில் முன்னை விட இப்போது அதிகம் பீதி படர்ந்திருந்தது. கண்களிரண்டும் மருள, பீதாம்பரத்தைப் பார்த்தான்.

"ராமசாமி! உன் எஜமான் இங்கு எப்போது திரும்பி வந்தாலும் போலீஸ் ஸ்டேஷனுக்கு வந்து முதலில் எனக்குத் தெரிவித்து விடு. இதனால் உனக்குத்தான் லாபம். உன்னால்தான் பெரிய கொலைகாரர்கள் அகப்பட வேண்டும். இன்னொரு உயிர் போகாமலிருக்க நீதான் உதவி செய்யவேண்டும். இவ்வளவு பெரிய பொறுப்புள்ள நீ அசட்டையாக இருந்து விடாதே. நான் இருக்கும் ஸ்டேஷன் தெரியுமல்லவா?" என்று கேட்டார்.

எல்லாவற்றுக்கும் சரியென்று தலையை ஆட்டிக்கொண்டே வந்த ராமசாமி, கடைசிக் கேள்விக்கும் தலையை ஆட்டினான்.

பீதாம்பரம், பங்களாவை விட்டு வெளியேறினார். அப்போது நன்றாக விடிந்து விட்டது. முதல் நாளிரவு தாமும் சுகுமாரனும் செய்த மகத்தான சாதனைகளை ஒருமுறை நினைத்துப் பார்த்துக் கொண்டார். பிறகு ரோஹிணியின் பங்களாவுக்கு அவர் வந்ததிலிருந்து நடந்த ஒவ்வொன்றும் நிழற்படம் போல அவர் மனதில் தோன்றி மறைந்தன. பங்களாவுக்குள் காலடி எடுத்து வைக்கு முன்பே, சுவரேறிக் குதித்து ஓடிய பெண்ணைக் கண்டது, திருஞானத்தின் அறை திறந்து கிடந்தது, கண்ணாடி உடைந்து தரையில் கிடந்தபடம், ரோஹிணியின் மாமா பெயரைக் கேட்டதும் தாம் அடைந்த அதிர்ச்சி—இத்தனையும் மாறி மாறி பீதாம்பரத்தின் மனத்திரையில் சுழன்றன. ஒவ்வொன்றையும் பொறுத்திப் பார்த்தார் பீதாம்பரம். சுவரேறிக் குதித்த பெண்ணேதான் திருஞானத்தின் அறையைத் திறந்திருக்க வேண்டும். அவளுக்குத் தேவையான ஏதோ ஒரு இரகசியம் அங்கு இருந்திருக்கிறது. அதைத் திருடிக் கொண்டு சென்றிருக்கிறாள். அந்த ரகசியம்—

அது ஏதாவது தஸ்தாவேஜாக இருக்கலாம். விலை மதிக்க முடியாத பொருளாயிருக்கலாம். அல்லது திருஞானத்தின் உயிருக்கே உலைவைக்கும் ஏதாவதுஒரு பொருளை அங்கு அவள் விட்டுச் சென்றிருக்கலாம். அவளேதான் திருஞானத்தைக் கொல்லுபவளாகக் கூட ஏன் இருக்கக்கூடாது?

பீதாம்பரத்துக்கு இப்போது மேலும் யோசனையாகிவிட்டது. அவளேதான் கொலை செய்பவளாயிருந்தாலும் மூகத்தைக் கூடப் பார்த்திராத அவளை இனங்கண்டு எங்கு போய்த் தேடுவது? திருஞானம் கொலை செய்யப்படுவதை எப்படித் தடுப்பது? ஒன்றும் புரியாமல் விழித்துக்கொண்டே வீட்டுக்குள் சென்றார். அங்கு சுகுமாரன் இன்னும் ரோஹிணியின் டயரியையே படித்துக்கொண்டிருந்தவன், பீதாம்பரத்தைக் கண்டதும் எழுந்து அவரிடம் சென்றான். சிந்தித்துச் சிந்தித்து சோர்ந்து போயிருந்த பீதாம்பரம் ஸோபாவில் தொப்பென்று உட்கார்ந்தார். தான் டயரியில் கண்ட விஷயங்களையெல்லாம் பீதாம்பரத்திடம் ஒரே மூச்சில் சொல்லி விடத் துடித்தான் சுகுமாரன்.

பீதாம்பரம் நெட்டுயிர்த்துக் கொண்டே பேசினார்.

"சுகுமாரா! எல்லாமே குழப்பத்துக்கு மேல் குழப்பமாகப் போய்க்கொண்டிருக்கிறது. 'தி'யில் ஆரம்பிக்கும் பெயருடையவரை நாம் கஷ்டப்பட்டுத் தேடவேண்டுமென்று சொன்னேனே, அவ்வளவுக்குக் கஷ்டம் கொடுக்காமல் ரோஹிணியின் மாமாவே திருஞானம் என்ற பெயருடனிருக்கிறார்" என்றார்.

"அப்படியா? அவரை உஷார்ப் படுத்தி விட்டீர்களல்லவா?" என்று பதற்றத்தோடு கேட்டான் சுகுமாரன்.

"ஆள் இருந்தால் தானே எச்சரிக்கைப் படுத்த. எங்கேயோ வெளியூருக்குப் போனவர் திரும்பவேயில்லையாம்".

"ரோஹிணி கொலை செய்யப்பட்டு விட்டாள் என்ற செய்தி தெரிந்து கூட அவர் வரவில்லையா?" என்று கேட்டான் சுகுமாரன்.

அவன் இப்படியொரு சந்தேகத்தைக் கிளப்பிவிட்டது பீதாம்பரத்துக்குக் கொஞ்சம் நஞ்சமிருந்த நம்பிக்கையையும் பறக்கடித்து விட்டது. எதிரிகள் ஏற்கெனவே திருஞானத்தைப் பிடித்து வைத்துக் கொண்டு, கொலை பற்றித் தங்களுக்கு அறிவிப்பார்களோ என்று பயந்தார் பீதாம்பரம். உண்மையில் திருஞானம் எதிரிகளின் கையில் சிக்காமலிருந்தால் ரோஹிணி

யின் மரணச் செய்திகேட்டு வந்திருப்பாரே! ரோஹிணி எவ்வளவு தான் அவருக்குப் பிடிக்காதவளாயிருந்தாலும் கூட அவள் இறந்து விட்டபோது கூடவா வராமலிருப்பார் ?

"சுகுமாரா! மூன்ருவது ஒருகொலை நடக்கப்போவது நிச்சயமாக எனக்குத் தெரிகிறது. அதை நம்மால் தடுக்க முடியாது. குற்றவாளிகள் மிகவும் தந்திரசாலிகளாயிருக்க வேண்டும். இல்லாவிட்டால் இவ்வளவு முன்னேற்பாட்டுடன் ஒவ்வொரு சிறு விஷயத்தையும் கவனித்துச் செய்வார்களா?" என்று வருத்தத்தோடு சொன்னுர் பீதாம்பரம்.

"அப்படியானல் நாராயணன், சுந்தரமூர்த்தி விஷயம்?"

"அவர்களை இனி வெளியே விட்டுவைப்பதில் நமக்கு ஒரு பயனும் இல்லை. ஏற்கெனவே உஷாராகிவிட்ட மூன்ருவது கொலையாளியை, இவர்களை வெளியில் விட்டுவைத்து விடுவதால் பிடித்துவிட முடியாது" என்ருர்.

"ரோஹிணியின் டயரியைப் படித்துப் பார்த்தேன். அத்தனை விஷயங்களும் சுந்தரமூர்த்திக்கு எதிராகத்தான் இருக்கின்றன. அவனுடைய சூதாட்டத்துக்கு மாதத்தில் மூன்று நான்கு முறை ஆயிரம் இரண்டாயிரம் என்று கரந்து கொண்டே யிருந்திருக்கிருன். இதை அவள் ஒவ்வொரு தடவையும் ரொம்ப வருத்தத்துடன் எழுதி யிருக்கிருள். கடைசியாக ஒரு வாரத்துக்கு முன்னல் சுந்தரமூர்த்தி, அவன் மனைவி தனியாயிருக்கும்போது போய் மிரட்டி பத்தாயிரம் ரூபாய் வாங்கியிருக்கிருன். இதெல்லாம் அவள் மாமாவுக்குத் தெரியாதாம். அடிக்கடி புஷ்பா என்று ஒரு பெயர் குறுக்கிடுகிறது" என்று சொல்லிவிட்டு டயரியின் ஒரு பக்கத்தைக் குறிப்பிட்டுக் காட்டினன். டயரியைக் கையில் வாங்கி அந்தப் பக்கத்தைப் புரட்டிப் பார்த்தார் பீதாம்பரம்.

"புஷ்பா குடும்ப கௌரவத்தைப் பார்க்காமல் தனக்கு மிகப் பிடித்தவனுடன் வீட்டை விட்டு வெளியேறினுள். ரொம்ப காலத்துக்குப் பிறகு இன்று இரவு பதினெரு மணிக்கு வந்தாள். அவள் மட்டுமேதான் வந்தாள். இதுவரையில், தான் சென்னையிலேயே தங்கியிருந்ததாகவும் தன் வறுமை அதிகமாகிவிடவே என்னை நாடி வந்ததாகவும் சொன்னுள். நான் செல்லாக் காசுகூட கொடுக்க முடியாது என்று மறுத்து விட்டேன். புஷ்பா வீட்டை விட்டு வெளியேறியவுடன் தந்தை அப்படித்தான் சொன்னுர். அதாவது தம் சொத்தில் புஷ்பாவுக்கு ஒரு செப்புக்காசு கூடக் கொடுக்க முடியாது என்று......"

பீதாம்பரம் நிமிர்ந்து சுகுமாரனைப் பார்த்து, "சுகுமாரா! ரோஹிணியுடன் பிறந்தவள் புஷ்பா என்று தெரிகிறது" என்று சொல்லிவிட்டு மீண்டும் டயரியைப் படிக்க ஆரம்பித்தார்.

மாமா சொன்ன யோசனைப்படியே தான் செய்யவேண்டு மென்று நினைக்கிறேன். அவளிடம் ஆசை காட்டி, வேறு வித மாகக் கையெழுத்தை வாங்கி அவளை ஏமாற்றிவிட வேண்டியது தான். அவளுக்காவது கட்டியவன் இருக்கிறன். எனக்குக் கணவர் இருந்தும் என்ன பிரயோசனம்? என்னையே பணம் காய்க்கும் மரமாக நினைப்பவர். நான் என் வாழ்நாளைக் கழிப்பது எப்படி?"

இன்னொரு பக்கத்தைத் திருப்பிப் படித்தார் பீதாம்பரம்.

"மாமாவின் போக்கு வரவர மோசமாகிக் கொண்டே வரு கிறது. என் கணவர் தொல்லை கொடுக்கிறரென்று தான் அவரை ஆதரவுக்காக பங்களாவில் இருக்கச் செய்தேன். 'பிள்ளையா குட்டியா, அப்படியே செய்கிறேன்' என்று என்னுடனேயே தங்கி விட்ட அவர் முதலில் என் கணவரை அடித்துத் துரத்தினர். ஆறுதலாயிருந்தது. ஆனல் சிறுகச் சிறுக அதிகாரத்தை மேற்கொள்ள ஆரம்பிக்கிறர். புஷ்பா பைத்தியக்காரத்தனமாக நாங்கள் தயாரித்த மோசடிப்பத்திரத்தில் கையெழுத்திட்டதி லிருந்து அவர் போக்கே மாற்றமாய்த்தானிருக்கிறது. அந்தப் பத்திரத்தில் என்ன எழுதப்பட்டிருக்கிறதென்று எனக்கே அவர் காட்டவில்லை. அவர் போகும் தோரணையைப் பார்த்தால் புஷ்பாவுடன் எனக்கும் குழியைப் பறிக்கிறரோ என்று பயமா யிருக்கிறது. என்னை இன்று அவர் மிரட்டிய மிரட்டு; என் கணவர் கூட அப்படி மிரட்டியிருக்கமாட்டார்"— டயரியை மூடினர் பீதாம்பரம்.

"சுகுமார்! இப்போது புஷ்பாவையும் கண்டுபிடித்தாக வேண்டும். முதல் வேலையாகச் சுந்தரமூர்த்தியைக் கைது செய்ய வேண்டும். இரண்டாவது, அவன் அறையில் கைப்பற்றிய டைப் அடிக்கப்பட்ட கடிதங்களையும் பத்திரிகை ஆபீஸிலிருந்து வாங்கிக்கொண்டு வந்த விளம்பர மூலத்தையும், பயங்கர 'விரோதிச்' சீட்டையும் நிபுணர்களுக்கு அனுப்பவேண்டும்......'

"பிறகு?"

"திருஞானத்தின் கொலைச் செய்தியை எதிர்பார்த்துக் கொண்டிருக்கவேண்டும். நாம் தான் கையாலாகாமல் விழுந்து கிடக்கிறேமே" என்று வெறுப்போடு கூறிவிட்டு வெளியே கிளம்பத் தயாரானர் பீதாம்பரம்.

சுந்தர்மூர்த்தியின் அறைமுன் வந்து நின்றனர் துப்பறியும் நிபுணர்களான பீதாம்பரமும் சுகுமாரனும் எட்டரை மணியாகியும் இன்னும் தூங்கிக்கொண்டிருந்தான் சுந்தரமூர்த்தி. அவனருகில் சென்று தட்டியெழுப்பினார் பீதாம்பரம். அவர்களுடன் வந்திருந்த நான்கு போலீஸ்காரர்களும் அவன் படுக்கையைச் சுற்றி நின்றுகொண்டனர். 'விறுட்'டென்று எழுந்த சுந்தரமூர்த்தி முதலில் போலீஸ்காரர்களைத்தான் பார்த்தான். பிறகு பீதாம்பரத்தைப் பார்த்தான். அடுத்த கணம் அவன் முகம் கலவரமடைந்துவிட்டதுபோல பயங்கரமாக மாறியது. அவன் பேச வாயெடுப்பதற்குள்,

"சுந்தரமூர்த்தி! உன்னை 'அரஸ்ட்' செய்திருக்கிறேன்" என்று நிதானமாகக் கூறினார் பீதாம்பரம்.

"ஏன்? எதற்கு? நான் என்ன தப்புச் செய்துவிட்டேன்?" என்று தடுமாறிப் போய்க் கேட்டான் சுந்தரமூர்த்தி.

இதுவரை வெளியே நின்றிருந்த சுகுமாரன் சற்று கனைத்துக் கொண்டு உள்ளே நுழைந்து பீதாம்பரத்தின் அருகில் வந்து நின்றான். சுகுமாரனைக் கண்ட சுந்தரமூர்த்திக்கு விவரம் விளங்கிவிட்டது. 'புத்தகம் போடுவதாக ஆசைகாட்டி ஒரு நாடகமே ஆடிவிட்டார்கள் போலீஸ்காரர்கள். தன்னை அவர்கள் வலையிலும் விழவைத்து விட்டார்கள்' என்று எண்ணியதும் அவன் விழி பிதுங்கியது. ஆக்ரோஷத்தோடு சுகுமாரனைப் பார்த்தான். சுகுமாரன் குறும்புத்தனமாகச் சிரித்தான்.

"சீக்கிரம். உன் உடைகளை உடுத்திக்கொள். இல்லாவிட்டால் இந்த தூங்குமூஞ்சிக் கோலத்திலேயே உன்னைத் தெருவில் கூட்டிக்கொண்டு போவோம்" என்று முடுக்கினார் பீதாம்பரம்.

சுந்தரமூர்த்தி சற்று தெம்பு வந்துவிட்டவனைப் போல் பேசினான். "அர்த்தமில்லாமல் நீங்கள் கைது செய்வதாகப் பயமுறுத்துவதை நினைத்தால் சிரிப்புத்தான் வருகிறது. காரணமில்லாமல் என்னைக் கைது செய்தால் நான் உங்கள் மீது வழக்குத் தொடருவேன். பிறகு சுந்தரமூர்த்தி இப்படி இருக்க மாட்டான், தெரிந்துகொள்ளுங்கள்" என்றான்.

"தம்பி! உன் நாவலில் வரும் வில்லன் பேச்சை அப்படியே நாடகத் தமிழில் ஒப்பிக்கிறாய் என்பது தெரியும். ஆனால் இப்போது நீ கைதி என்பதை மறந்துவிடாதே! உம்...நட" என்று கேர்பத்தோடு பேசினார் பீதாம்பரம்.

சுந்தரமூர்த்தி வீராப்பாகப் பேசிவிட்டானே தவிர, உடைகளை மாற்றிக்கொண்டு, போலீஸ்காரர்களுடன் வெளியேறி நடக்க அவன் தவறவில்லை. வெளியே புறப்படுவதற்கு முன் பீதாம்பரம், வேண்டுமென்றே சுவர் அலமாரியைப் பார்த்துவிட்டு, "என்னப்பா, புஸ்தகங்களை யெல்லாம் அப்படித் தாறுமாருகப் போட்டிருக்கிருய்? எதையாவது தேடினுயா?" என்று கேட்டார்.

"ஆமாம். ஒரு புஸ்தகத்தைத் தேடினேன்" என்று வெறுப்போடு கூறினுன் சுந்தரமூர்த்தி.

"எந்தப் புத்தகத்தை? ரோஹிணியின் டயரியையா?" என்று விஷமமாகச் சிரித்துக்கொண்டே கேட்டார் பீதாம்பரம். இதைக் கேட்டதும் சுந்தரமூர்த்திக்குத் தேள் கொட்டியதுபோல, மனம் சுரீர் என்று வலித்தது.

"இப்போது புரிகிறதா, நாங்கள் எதற்காக உன்னைக் கைது செய்கிறேம் என்று. ஆனலும் நீ கல்மனசுக்காரன்தானப்பா. டயரியில் சிவப்பு மையால் எழுதினதோடு நின்றிருக்கக்கூடாது? அதைச் செயலிலும் காட்டிவிட்டாயே. ரோஹிணியைக் கொன்றுவிட்டாயே; இனி அவளைப்போல் யார் பணம் தருவார்கள் என்று சிறிதாவது யோசித்தாயா?" என்று கேட்டார் பீதாம்பரம்.

"ரோஹிணியை நான் கொலை செய்யவில்லை. அவள் டயரியைத் திருடியது உண்மை. ஆனல் நான் அவளுக்கு ஒரு தீங்கும் செய்யவில்லை" என்று சொல்லிக்கொண்டு அழுதுவிட்டான் சுந்தரமூர்த்தி.

மேற்கொண்டும் ஒன்றும் பேச விரும்பவில்லை பீதாம்பரம். வெளியேறி நடந்தார். சுந்தரமூர்த்தியும்தான்!

கடையில் 'காலைச் செய்தி' ஒன்றை வாங்கிக் கொண்டு நடந்தான் சுகுமாரன். பீதாம்பரம் அவனிடமிருந்து பத்திரிகையை வாங்கி வழக்கமான பகுதியைப் பார்த்தவர் பதறியபடி நின்றுவிட்டார். அவர் எதிர்பார்த்தபடி 'மர்ம விளம்பரம்' அன்றைய காலைச் செய்தியில் வெளியாகி யிருந்தது.

> "இன்று இரவு மூன்றரை மணிக்கு அயனுவரத்தில் நடக்கும் பாட்டுக் கச்சேரியைக் கேட்க விரும்பும் நேயர்கள் வரலாம். இலவசமாக அனுமதிக்கப்படுவர். உயர் திரு பீதாம்பரம் அவர்கள் தலைமை வகிப்பார்கள்"

# 7. உரிமையில்லாத தங்கை!

சுந்தரமூர்த்தியைச் சிறை வைத்த திருப்தியில் சொக்கிப் போயிருந்த துப்பறியும் நிபுணருக்கு இப்போதுதான் இன்ஸ்பெக்டர் ஏகாம்பரத்திடம் பேசவேண்டுமென்ற கவனமே வந்தது. பத்திரிகை விளம்பரம் இத்தனைக்கும் அவரை உறுத்தாமலில்லை.

ஏகாம்பரத்தின் முகத்தில் விவரிக்கமுடியாத சோகம் படர்ந்திருந்தது. தாங்கள் இதுவரை சம்பாதித்த நல்ல பெயரெல்லாம் இந்த மாயக் கொலைகளைச் செய்பவர்கள் மூலம் அழிந்துகொண்டு வருவதை நினைத்து வருந்தினாரோ என்னவோ? ஆனால் குற்றவாளியை எந்த விதத்திலும் கண்டுபிடித்து அவனுக்குச் சரியான பாடம் கற்பிக்கவேண்டுமென்று மட்டும் கருவிக் கொண்டேயிருந்தார். நாராயணனையும் சுந்தரமூர்த்தியையும் சித்திரவதை செய்யத் துடித்தது அவர் மனம். நாராயணனைப் பற்றி அவர் நினைத்துக்கொண்டிருக்கையிலேயே அவனை இழுத்துக்கொண்டு வந்து நிறுத்தினர் இரண்டு போலீஸ்காரர்கள். இன்ஸ்பெக்டரின் விழிகளிரண்டும் கொவ்வைப்பழம்போல் சிவந்துவிட்டன. ஆக்ரோஷத்தோடு அவனை நோக்கிச் சென்றார். அவர் அப்போதிருந்த நிலையில் நாராயணனைக் கசக்கிக் கொன்றுவிடுவார் என்பதை உணர்ந்துகொண்ட பீதாம்பரம் சட்டென்று எழுந்துசென்று நிலைமையைச் சமாளித்துவிட்டார். நாராயணனின் சட்டையின் நெஞ்சைப் பிடித்து இழுத்து ஏகாம்பரம் குத்த முயன்றது மட்டும் நடந்திருக்குமானால் அவனுடைய ஒரு பக்கத்துப் பற்களெல்லாம் உதிர்ந்து தாடையே உடைந்து போயிருக்கும். நல்ல வேளையாக பீதாம்பரம் தடுத்துவிட்டார்.

"நீங்கள் நினைப்பது போல, இவனோ சுந்தரமூர்த்தியோ விஷயத்தைக் கக்குவார்கள் என்று நினைக்காதீர்கள். நகத்தில் ஊசியை இறக்கினாலும் சரி, விழிகளில் விரலைவிட்டு ஆட்டினாலும் சரி, இரண்டு பேரிடமிருந்தும் ஒரு வார்த்தைகூட வெளியே வராது" என்றார் பீதாம்பரம்.

இன்ஸ்பெக்டரின் ஆத்திரம் சிறிது சிறிதாகத் தணிய ஆரம்பித்தது. பீதாம்பரம் மேலும் பேசினார்.

"மிஸ்டர் ஏகாம்பரம்! நீங்கள் நினைப்பது எனக்கும் புரிகிறது. அவ்வளவு சுலபத்தில் மசிந்துவிடும் ஆட்களல்ல இவர்கள்" என்று நம்பிக்கையிழந்தாற்போல பேசினார் பீதாம்பரம்.

எதையும் தைரியமாகவும் சாதுர்யமாகவும் சாதிக்கும் பீதாம்பரமா இப்படிச் சோர்ந்துபோய்ப் பேசுகிறார் என்று ஆச்சரியப்பட்டுவிட்டார் இன்ஸ்பெக்டர். எதிரே நின்றுகொண்டிருந்த நாராயணனை ஏறிட்டுப் பார்த்தார் பீதாம்பரம்.

"என்ன நாராயணா! உன் சித்தப்பா உன்னைப்பற்றிச் சொல்லியபடி உன்னை அவ்வளவு நல்லவனென்று என்னால் நம்பமுடியவில்லை. உனக்கு எதற்கப்பா இந்த வேலை? உலகத்திலுள்ள எல்லோரும் தகப்பன் தேடிவைத்த சொத்து வேண்டும் என்று பிடிவாதமாயிருப்பதால் தான் ஏழை பணக்காரன் என்ற இரண்டு ஜாதிகள் எப்போதும் இந்த உலகத்தில் நீடித்துக் கொண்டேயிருக்கிறது. பணத்தின்மேல் ஆசைப்பட்டு நீ செய்த நீசவேலையால் உன் உயிரும் போகப்போகிறது. உன் பெண்டாட்டி பிள்ளைகளும் தெருவில் நிற்கப் போகிறார்கள்" என்று அவனுக்காக இரக்கப்படுபவர் போல் பரிந்து பேசினார் பீதாம்பரம்.

தலைகுனிந்த வண்ணம் நின்று கொண்டிருந்த நாராயணன் பொல பொலவென்று கண்ணீரைப் பெருக்கி விட்டான். ஏங்கி ஏங்கி அழுதுகொண்டே,

"ஸார்! சூழ்நிலை, நீங்கள் என்னைச் சந்தேகிக்கும்படி வைத்து விட்டது. சத்தியமாக எனக்கு ஒரு விஷயமும் தெரியாது. என் தகப்பனாரைக் கொல்வதானால் இதைவிட எவ்வளவோ நல்ல சந்தர்ப்பங்களெல்லாம் இருந்தன. எனக்குத் தண்டனை கொடுத்து என் பெண்டாட்டி பிள்ளைகள் தெருவில் நின்று கதறினார்கள் என்றால் அந்தப் பாவம் உங்களை ஏழேழு ஜென்மத்துக்கும் விடாது" என்று குமுறிக்கொண்டு சொன்னான்.

இன்ஸ்பெக்டர் ஆத்திரத்தோடு ஏதோ பேச வாயெடுத்தார். இதற்குள் ஒரு போலீஸ்காரன் உள்ளே வந்து, நாராயணனின் சித்தப்பா கோபி வந்திருப்பதாகவும், உடனே பார்க்க வேண்டுமென விரும்புவதாகவும் சொன்னான்.

"சர்ட்டிபிகேட் கொடுத்த அண்ணன் மகன் எப்படிப்பட்டவன் என்று கோபி தெரிந்து கொள்ளட்டும். வரச்சொல்" என்றார் பீதாம்பரம்.

கொஞ்ச நேரத்துக்கெல்லாம் கோபி பயந்தபடி உள்ளே வந்தார். அவர் முகம் பார்க்கப் பரிதாபமாயிருந்தது. நாராயணனை இரக்கமாகப் பார்த்துவிட்டு, பீதாம்பரத்தைக் கெஞ்சும் பாவனையில் பார்த்தார்.

பீதாம்பரம் சிரித்துக் கொண்டே, "கோபி! நீங்கள் நாராயணனைப்பற்றிக் கொடுத்த ஸர்ட்டிபிகேட்டை வைத்துக் கொண்டு அவனை ஒன்றும் செய்யாமல் விட்டு விட்டேன். ஆனால் போகப்போக நடந்த கதைகளும் சம்பவங்களும் நாராயணன்தான் அவன் அப்பாவைக் கொன்றவன் என்று சாட்சி சொல்லுகின்றன. இதற்கு மேலும் உங்கள் நாராயணனை வெளியே விட்டு வைத்தால் எங்கள் திறமைக் குறைச்சலைத்தான் குறிக்கும்" என்றார்.

கோபியால் ஒன்றும் பேசமுடியவில்லை. தோளில் போட்டிருந்த துண்டை எடுத்து முகத்தை மூடிக்கொண்டு விக்கி விக்கி அழுதார். அவரைத் தேற்றுவதுபோல, பீதாம்பரம் கோபியின் தோளில் கையை வைத்து உலுக்கினார். நிமிர்ந்து உட்கார்ந்து கொண்ட கோபி பொங்கி வரும் அழுகையை அடக்கிக் கொண்டு,

"ஸார்! அவனுடைய குழந்தை குட்டிகளின் முகத்தைப் பார்த்தாவது அவனை விட்டு விடுங்கள். எங்கள் நாராயணன் இப்படிப்பட்ட மாபாவத்தைச் செய்திருக்கவே மாட்டான். அவன் இயற்கையிலேயே பயந்த சுபாவக்காரன். பயந்த உள்ளம் கொண்டவன். எங்கேயாவது ஒருவன் பெற்ற தகப்பனையே கொலை செய்வானா?" என்றார் கோபி. அவர் கண்களில் கண்ணீர் பொங்கி நின்றது.

கோபியின் கெஞ்சுதல் பீதாம்பரத்துக்கு என்னவோபோல் தானிருந்தது. ஆனால் நாராயணன் மீது அவருக்குச் சந்தேகம் சந்தேகம்தான். கோபியின் இரங்கத் தக்க நிலையைக் கண்டு பராமுகமாயிருக்கும்படி கடமை அவர் மனதைக் கல்லாக்கி விட்டது.

நாராயணனை எப்படியும் தம்முடன் வீட்டுக்கு அழைத்துக் கொண்டு சென்றுவிட வேண்டுமென்ற முடிவுடன் வந்திருந்த கோபி, இன்ஸ்பெக்டரிடமும், பீதாம்பரத்திடமும் அழாக் குறையாக முறையிட்டது வீண்முயற்சியாகி விட்டது. ஒன்றும் பேசாமல் வெளியே எழுந்து சென்றார்.

நாராயணனை சுந்தரமூர்த்தி இருந்த சிறைக்கு அடுத்து அடைத்தார்கள். டைப் அடிக்கப்பட்ட அபாயச் சீட்டுகளும் சுந்தரமூர்த்தியின் அறையில் கிடைத்த கடிதமும் ஒத்திருக்கின்றவா என்று தெரிந்து கொள்ள நிபுணர்களைத் தேடிக் கொண்டு செல்ல ஆயத்தமானான் சுகுமாரன்.

"இந்த வேலையையும் முடித்துவிட்டு இன்னொரு வேலையையும் கவனித்துக்கொண்டு வரவேண்டும் சுகுமார். ரோஹிணியின் டயரியிலிருந்து, புஷ்பா அவள் உடன்பிறந்த சகோதரி என்று தெரிந்து விட்டது. அக்காவோ தங்கையோ தெரியவில்லை. இத்தனை நாடகங்களிலும், ஒரே ஒரு தடவையைத் தவிர மற்ற நேரத்திலெல்லாம் புஷ்பா குறுக்கிடாமலிருக்கிறது எனக்கு ஆச்சரியமாய்த்தானிருக்கிறது." என்று பீதாம்பரம் பேச்சை முடிப்பதற்குள், சுகுமாரன்,

"அவளைப் பற்றி நான் விசாரித்துக் கொண்டுவர வேண்டும். அவ்வளவுதானே ஸார்?" என்ருன்.

"அவள் இப்போது எங்கே இருக்கிருள் என்பதைத் தெரிந்து கொண்டு வந்தாயானுல் காரியம் இன்னும் சுளுவாகும்" என்ருர் பீதாம்பரம்.

'ஆகட்டும்' என்று பலமாகத் தலையசைத்து விட்டு வேகமாக வெளியேறிச் சென்ருன் சுகுமாரன்.

இதுவரை பத்திரிகை விளம்பரத்தைப் பற்றிப் பேசவே சந்தர்ப்பம் கிடைக்காமல் ஏங்கிக் கொண்டிருந்த இன்ஸ்பெக்டர் ஏகாம்பரம் இப்போது அதற்கான வாய்ப்புக் கிடைத்ததும் பேச்சைத் துவக்க முயன்ருர். இதைப் புரிந்து கொண்ட பீதாம்பரம்,

"நீங்கள் சொல்லப்போவது எனக்குப் புரிகிறது. இன்று அயனுவரத்தில் நடக்கப்போகும் மூன்ருவது கொலையைப்பற்றி ரொம்பத் தந்திரமாக் விளம்பரம் செய்திருக்கிருர்கள்...விளம்பரம் என்றதும்தான் கவனத்துக்கு வருகிறது" என்று சொல்லிக்கொண்டே வாசலில் நின்று கொண்டிருந்த ஒரு கான்ஸ்டபிளை அழைத்தார். 'காலைச் செய்தி'க் காரியாலயத்துக்கு அவனிடம் ஒரு கடிதம் கொடுத்தனுப்பினுர்.

"இப்போது வந்திருக்கும் விளம்பரம் டைப் அடிக்கப்பட்டிருக்கிறதா அல்லது கையால் எழுதியிருக்கிருர்களா என்று பார்ப்பதற்குத்தான் மூன்ருவது விளம்பரத்தையும் கொண்டு வரும்படி கடிதம் கொடுத்தனுப்பினேன்" என்று இன்ஸ்பெக்டரிடம் சொன்னுர் பீதாம்பரம்.

பிறகு 'வி-ரோ-தி' என்று சீட்டுகளில் எழுதி கத்தியில் தொங்கவிடப்பட்டிருப்பதற்குத் தாம் புரிந்து கொண்ட அர்த்தத்தை விரிவாகக் கூறினுர் பீதாம்பரம். ஏகாம்பரத்துக்கு அவர்

சொல்லிய விளக்கத்தைக் கேட்டதும் ஒரே ஆச்சரியமாகி விட்டது.

"என்ன இருந்தாலும் நீங்கள் பீதாம்பரம் பீதாம்பரம்தான். நானும் எட்டு வருஷங்களாகத்தானிருக்கிறேன். குற்றவாளி கையில் அகப்பட்டால் கட்டிவைத்து உதைக்கத்தான் பழகியிருக்கிறேன்" என்று தம் தோல்வியை ஒப்புக்கொண்டு பேசினார் ஏகாம்பரம்!

"அ...நீங்களும் எல்லோரும் எனக்கு இப்படி ஒரு பெரிய குல்லாவாகப் போடப்போய்த்தான் இப்போது நடந்து கொண்டிருக்கும் இந்த மாயக் கொலைகளை ஒவ்வொன்றாகக் கோட்டை விட்டுக் கொண்டு வருகிறேன்" என்று தம்மையே நொந்து கொண்டு பேசினார் பீதாம்பரம்.

பிறகு இருவருமாக இந்த வழக்கு பற்றிப் பலவாறாகப் பேசிக்கொண்டிருந்தார்கள். பீதாம்பரம் கடைசியில் எழுந்து நின்றார்.

"இன்ஸ்பெக்டர் ஸார்! நானே தைரியத்தை இழந்து இப்படியெல்லாம் பேசுகிறேனே என்று நீங்கள் நினைக்காதீர்கள். இன்று நடக்கப்போகும் கொலையை நம்மால் தடுக்கவே முடியாது. எதற்கும் ராத்திரி எட்டரை மணிக்கெல்லாம் நாம் அயனாவரம் ஸ்டேஷனில் இருப்போம். நாலு மணிக்கு இங்கு சுகுமாரனையும் அழைத்துக்கொண்டு வருகிறேன். புறப்படலாம்" என்று சொல்லிவிட்டு வெளியேறினார்.

பீதாம்பரம் சொல்லிய வேலைகளை அநேகமாக முடித்துக் கொண்டு வந்து சேர்ந்த சுகுமாரன் அங்கு பீதாம்பரம் இல்லாததைக் கண்டு வீட்டுக்கு நடையைக் கட்டினான். ஸ்டேஷனுக்கு வெளியே ஒரு மரத்தடியில் கோபி நின்றுகொண்டிருந்தார். சுகுமாரனைக் கண்டதும் அவனிடம் விரைந்து சென்றார். அவர் மீது சுகுமாரனுக்கு ஏதோ ஒரு கருணை பிறந்தது.

"என்ன செய்வது? நாராயணன் பேரில் சந்தர்ப்பங்கள் குற்றம் சாட்டும்போது நாமோ பீதாம்பரமோ என்னதான் செய்ய முடியும்?" என்று அனுதாபத்தோடு பேசினான் சுகுமாரன்.

"என்ன ஸார் இது? ஒவ்வொருவராகக் கொலையாகிக் கொண்டேயிருப்பார்கள். ஒவ்வொரு தடவையும் அப்பாவி ஒருத்தனைப் பிடித்து உள்ளே அடைத்தால் நீதிக்குத்தான் மதிப்பு ஏது?" என்று குமுறும் உள்ளத்தோடு கூறினார் கோபி.

"அப்படியெல்லாம ஒன்றும் நடக்காது. உங்களுக்குத் தெரியுமே பேப்பரில் விளம்பரம் செய்து கொலை நடத்துகிறார்களென்று; அதேபோல் இன்னும் ஒரு விளம்பரம் வந்திருக்கிறது."

"என்னது? இன்னும் கொலை நடக்கப் போகிறதா என்ன?" என்று திடுக்கிட்டுப்போய்க் கேட்டார் கோபி.

"ஆமாம். அயனாவரத்தில்தான் இந்தக் கொலை நடக்கப் போகிறது என்று விளம்பரம் சூசகமாகச் சொல்லுகிறது. எங்களுக்கு முன்னேரத்திலேயே அயனாவரத்தில் வேலை வந்து விட்டது" என்று சொல்லிக்கொண்டே நடந்தான் சுகுமாரன்.

நான்கு மணியாகியும் சுகுமாரன் வராமற்போகவே பொறுமையின்றி ஹாலில் உலாவிக் கொண்டிருந்தார் பீதாம்பரம்.

வீட்டுக்குள் நுழைந்ததும், தன் முதல் தோல்வியை ஒப்புக் கொண்டான் சுகுமாரன்.

டைப் அடிக்கப்பட்ட சுந்தரமூர்த்தியின் கடிதங்களில் உள்ள எழுத்துகளை மற்றவைகளுடன் பொருத்திப் பார்த்ததில் ஒரே மெஷினில் அடிக்கப்பட்டவை யல்ல என்று சுகுமாரன் சொன்னதும் பீதாரம்பரத்துக்கு இடிவிழுந்தது போலாகிவிட்டது. சுந்தரமூர்த்தி இந்த வகையில் சிக்கிக் கொள்ளாதபடி தப்பிவிட்டானே என்று மனத்திற்குள் கருவினார்.

"ரோஹிணியின் வேலைக்காரனை வற்புறுத்தி விசாரித்தேன். ஒரு பலனுமில்லை. பக்கத்து பங்களாவுக்குள் நான் நுழைந்ததே பெரிய பாடாகிவிட்டது. அதைவிடப் பெரிய கஷ்டம் அங்கு ஒரு மூலையில் உட்கார்ந்து வெற்றிலை தட்டிக் கொண்டிருந்த பாட்டியை என் வழிக்குக் கொண்டு வருவதில் இருந்தது. கடவுள் இல்லை, சாமி இல்லை என்று இந்தக்காலத்து வாலிபர்கள் எல்லோருமே சொல்லுகிறார்கள் என்று இந்த உலகத்திலுள்ள அத்தனை இளைஞர்கள் மேலும் அவளுக்குக் கோபம்......" என்று பேசிக்கொண்டே போனான் சுகுமாரன். அவன் விஷயத்தை விட்டு விட்டு ஊர்க் கதையை ஆரம்பித்ததும் பீதாம்பரத்துக்குக் கோபம் வந்துவிட்டது.

"சுகுமாரா! உன்னிடம் அத்தை பாட்டி கதையைக் கேட்கவில்லை. புஷ்பா ரோஹிணிக்குத் தங்கையா அக்காவா? அவள் எங்கிருக்கிறாள்? அதை முதலில் சொல்லு" என்றார்.

"கொஞ்சம் அமைதியாகக் கேளுங்கள் ஸார், நான் சொல்லுவதை. கிழவியைக் குல்லாப்போட்டு விஷயத்தைக் கிரகிப்பதற்குள் நாலு டம்ளர் தண்ணீர் குடித்து விட்டேன். லேசில் சொன்னாளா அவள். கெஞ்சாத குறை. கடைசியாகத் தன் பொக்கைவாயைத் திறந்து பேச ஆரம்பித்தாள்.

"ரோஹிணியின் தங்கைதான் புஷ்பா. கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தாளாம். ரோஹிணிக்குக் கல்யாணமானதும் சுந்தரமூர்த்தியும் அவர்கள் வீட்டுடனேயே வந்து இருந்து கொண்டது அவளுக்குக் கொஞ்சம்கூடப் பிடிக்கவில்லை. சதா ரோஹிணியுடன் சண்டை போட்டுக்கொண்டே யிருந்திருக்கிறாள்......" என்று இழுத்தான்.

"சரி...சரி. அயனாவரத்துக்குப் போகும் வழியில் பாக்கி விஷயத்தைச் சொல்லு. சொல்லுவதை ஒரே வரியில் முடிப்பானா? கதை யளப்பானா?" என்று அலுத்துக் கொண்டார் பீதாம்பரம்.

"ஸார்! நாம் அயனாவரத்துக்குப் போக வேண்டுமென்றவுடன் தான் கோபியின் கவனம் வருகிறது. உங்களை ஸ்டேஷனில் தேடிவிட்டு வெளியே வரும்போது அங்கே கோபி நின்று கொண்டிருந்தார். அவரைப் பார்க்கவே ரொம்பப் பரிதாபமாயிருக்கிறது" என்றான் சுகுமாரன்.

"அவ்வளவு நேரம் வரையுமா கோபி அங்கேயே நின்று கொண்டிருந்தார்? அடபாவி மனுஷன். அவர் இரக்கமெல்லாம் நாராயணனின் ஏழ்மையைப் பற்றியும், அவன் மனைவி மக்கள் தெருவில் நிற்பார்களே என்ற பரிதாப உணர்ச்சியும் தான் சுகுமாரா" என்றார் பீதாம்பரம்.

சிறிது நேரத்தில் சுகுமாரனும் பீதாம்பரமும் போலீஸ் ஸ்டேஷனுக்குச் சென்றனர்.

மணி ஏழு ஆகிவிட்டது. இன்ஸ்பெக்டரும் துப்பறியும் நிபுணர்கள் இருவரும் ஜீப் காரில் ஏறிக்கொண்டு அயனாவரத்தை நோக்கிப் புறப்பட்டனர். அந்தக் கரபுரச் சத்தத்திலும் புஷ்பாவைப் பற்றித் தான் தெரிந்து கொண்டுவந்த விஷயங்களைப் பீதாம்பரத்திடம் சொல்லி முடிக்காவிட்டால் சுகுமாரனுக்கு மனசு நிம்மதியே படாது போலிருந்தது. இன்ஸ்பெக்டரும் விஷயத்தை சுவாரஸ்யமாகக் கேட்பதற்காக பீதாம்பரத்துக்குச் சொல்லிய விஷயங்களை அவருக்கும் ஒருமுறை சொல்லித் தீர்த்து விட்டுக் கதையைத் தொடர்ந்தான்.

"ரோஹிணியின் அப்பா உயிருடனிருக்கும் போதெல்லாம் அவளுடைய மாமா அங்கு வருவதில்லையாம். கிழவிக்கு புஷ்பா மேல் ரொம்பக் கோபம் இருக்கிறது. ஏனென்றால் அவள் யாரிடமும் சொல்லிக் கொள்ளாமல் எவனோடோ ஓடிப் போய்விட்டதிலிருந்துதான் அந்தக் குடும்பமே சீரழிந்து விட்டதென்று அவள் நம்புகிறாள்.

இதைக் கேட்டதும் பீதாம்பரத்துக்குத் தூக்கிவாரிப் போட்டது. சுகுமாரன் சொன்னவற்றை இதுவரை அலட்சியமாகக் கேட்டுக் கொண்டே வந்தவர் இப்பொழுது கவனமாகக் கேட்க ஆரம்பித்து விட்டார்.

"புஷ்பா உண்மையில் ரோஹிணியைவிட நல்ல குணம் உடையவளாம். ஒழுக்கமானவளுங்கூட. என்ன ஆயிற்றோ? ஒரு நாள் அவளைத் திடீரென்று காணவில்லை. அங்கு ஒருவனுடன் பார்த்தேன், திருவிதாங்கூரில் ஒரு மைனருடன் பார்த்தேன் என்று கொஞ்ச காலம் தகவல்கள் வந்துகொண்டிருந்தன. புஷ்பாவின்மேல் கோபமாயிருந்த அவள் தந்தை அவளுக்கு ஒரு செப்பாலடித்த காசுகூடத் தம் சொத்திலிருந்து கொடுக்க முடியாது என்று அடிக்கடி சொல்லிக் கொண்டே வந்தாராம். பாவி மனுஷன், உயில் எழுதிவைக்காமலே சென்று விட்டார். சமீபத்தில் சில மாதங்களுக்கு முன் ரோஹிணியைப் பார்க்க வந்தாளாம் புஷ்பா. ஆனால் கிழவியோ வேறு யாருமோ புஷ்பாவை அப்போது பார்க்கவில்லை. தனக்கு உதவும்படி அக்காவைக் கேட்டிருக்கிறாள் புஷ்பா. தந்தையின் சொல்லைத் தங்கையிடமே திருப்பிப் படித்திருக்கிறாள் ரோஹிணி. அதாவது அவளுக்குச் சொத்தில் பங்கு கிடையாது என்று சொல்லி விட்டாள். ஆனால் ரோஹிணியின் மாமா புஷ்பாவைச் சமாதானப் படுத்துபவர் போல நடித்து அவளிடம் திருட்டுத்தனமாக பத்திரமொன்றில் கையெழுத்து வாங்கிவிட்டாராம்......"

வேலைக்கார ராமசாமி தம்மிடம் சொன்ன விவரங்களுக்கும், டயரியில் தாம் படித்த விஷயங்களுக்கும் மேலாக சுகுமாரன் சொல்லப் போகிறான் என்பதை அறிந்ததும் இன்னும் சுவாரஸ்யமாக அவன் சொல்லப் போவதைக் கேட்க ஆரம்பித்தார் பீதாம்பரம். காரை ஓட்டிச் சென்று கொண்டிருந்த இன்ஸ்பெக்டரும் கதை கேட்கத் தவறவில்லை.

"மாமா புஷ்பாவுக்குத் தூபம் போடவே புஷ்பா கண்ணை மூடிக்கொண்டு கையெழுத்தைப் போட்டு விட்டுப் பின்னால் தான் கைசேதப்பட்டாளாம். ஒரு நாள் இருவருக்கும் பலத்த

சண்டை நடந்துவிட்டது. ரோஹிணி புஷ்பா பக்கம் சேர்ந்து கொண்டாள். அந்தச் சண்டைக்குப் பிறகு புஷ்பாவையும் மாமாவையும் காணவேயில்லையாம்" என்று முடித்தான் சுகுமாரன். இதற்குள் அயனாவரம் ஸ்டேஷனை அடைந்து விட்டது கார். அங்கிருந்த அயனாவரம் ஸ்டேஷன் இன்ஸ்பெக்டர் உமாபதி, அவர்களை வரவேற்றார். எல்லோருமாக நடக்கப்போகும் கொலையைப்பற்றிக் கையாலாகாமல் பேசிக்கொண்டே யிருந்தார்கள். நேரம் வளர்ந்து கொண்டேயிருந்தது

மணி மூன்று அடித்தது. இப்போதுதான் நான்குபேரும் விழித்துக் கொண்டார்கள். இன்னும் அரை மணி நேரம்...... முப்பது நிமிஷங்கள்......!

இப்படி ஒவ்வொரு முறையும் நிமிஷங்களை எண்ணி எண்ணி உட்கார்ந்து கொண்டு அக்ரமத்தை வளரவிடுகிறோமே என்று வருந்தினார் பீதாம்பரம். இன்ஸ்பெக்டர்கள் இருவருக்கும் இருப்புக் கொள்ளவில்லை. சுகுமாரன் பொறுமையற்றுக் கையைச் சொடுக்கிக் கொண்டே உட்கார்ந்திருந்தான். ஏகாம்பரம் தம் கைக்கடிகாரத்தைப் பார்த்தார். மணி மூன்றேகால். எங்கோ ஓர் இடத்தில் தலைக் கோழி கூவியது, அமைதியோடு உறங்கிக் கொண்டிருந்த உலகைத் தட்டி யெழுப்புவது போலிருந்தது. அதைத் தொடர்ந்து, இரண்டந்தரச் சேவல்களும் கற்றுக்குட்டிகளும்கூட சரமாரியாகக்கூவித் தள்ளிக்கொண்டிருந்தன! கோழிச் சத்தத்தைக் கேட்டு, அருகிலிருந்த வீட்டுத் தொழுவத்திலிருந்த மாடு விழித்துக் கொண்டது போலிருக்கிறது, அதன் மணி ஓசை 'கிணுங் கிணுங்' கென்று ஒலித்தது.

மணி மூன்று இருபது!

இன்னும் பத்து நிமிடங்கள்!!

அறுநூறு விநாடிகள்!!!

கெட்டது நடக்கத்தான் சகலமும் கைகூடிவரும் போலிருக்கிறது. சாதாரணமாக நகர மறுக்கும் கடிகார முள், அப்போது விறுவிறு வென்று ஓடியது.

மணி மூன்று இருபத்தெட்டு!

"இன்னும் இரண்டு நிமிஷங்கள்" என்று வாய்விட்டுக் கதறிவிட்டார் பீதாம்பரம்! திடுக்கிட்டுப் போன மற்ற மூவரும் பதறியடித்துக் கொண்டு எழுந்து நின்றனர்.

"இன்னும் இரண்டே நிமிஷம்" என்று அவர்களைப் பார்த்து அமைதியாக, மீண்டும் சொன்னார் பீதாம்பரம்.

உட்கார்ந்து கொண்டனர்.

மணி மூன்றரை. 'டங்' கென்று ஒரு முறை அடித்து நின்றது கடிகாரம். எல்லோர் முகங்களிலும் களையேயில்லை. வெளுத்துக் காணப்பட்டன.

ஐந்து நிமிஷங்களாகி விட்டன. யாரையும் காணோம்.

மேலும் ஐந்து நிமிடங்கள் - ம்...ஹூம்...!

கால் மணி நேரமாயிற்று......

யாரோ தட தடவென்று ஓடிவரும் சப்தம் கேட்டது. நால்வரும் பதறியடித்துக் கொண்டு எழுந்து நின்றனர். ஒரு கான்ஸ்டபிள் உள்ளே ஓடிவந்து நின்றான். அவன் உடலெல்லாம் ஆடிக்கொண்டிருந்தது.

"ஸார்! ஞானம் இருக்காருல்ல, அவரை யாரோ கத்தியாலே குத்திக் கொலை செய்திட்டாங்க" என்று வியர்க்க விறுவிறுக்க உமாபதியைப் பார்த்துச் சொன்னான்.

"அவர் பெயர் ஞானம் தானா?" என்று கேட்டார் பீதாம்பரம்.

"இல்லை. திருஞானம். இந்தப் பக்கத்தில் கொஞ்சம் பசை உள்ளவர்" என்றார் இன்ஸ்பெக்டர் உமாபதி.

பீதாம்பரத்தின் முகம் பேயறைந்தது போலாகிவிட்டது.

## 8. கடைசிக் கொலை

இன்ஸ்பெக்டர் உமாபதி காட்டிய வழியில் ஓட்டமும் நடையுமாகச் சென்றார்கள் எல்லோரும். பிரம்மாண்டமான மாளிகை ஒன்றின் முன்னால் வந்து நின்றார் உமாபதி.

"இவர் ரொம்பநாளாக ஊரிலில்லை என்றுதான் சொல்லிக் கொண்டார்கள். ஆனால் எப்போது வந்தார் என்று யாருக்குமே தெரியாது" என்றார் உமாபதி.

அங்கு நின்று பேசிக் கொண்டிருக்க விரும்பாத பீதாம்பரம் நேராக உள்ளே சென்றார். ஒரே ஒரு வேலைக்காரன் மட்டும் வாசலில் பயந்தபடி நின்று கொண்டிருந்தான். அவனைக்கூடவே அழைத்துக்கொண்டு உள்ளே நடந்தார் பீதாம்பரம். மற்றவர்களும் அவர்களைப் பின்தொடர்ந்தார்கள்.

மாடிக்குச் சென்று முதல் அறைக்குள் நுழைந்தனர். அங்கே கட்டிலில் பரிதாபமாகக் கொல்லப்பட்டுகிடந்தார் ஒரு மனிதர். மெத்தை பூராவும் ரத்தத்தில் ஊறிக்கிடந்தது. அருகே ஒரு போலீஸ்காரர் நின்று கொண்டிருந்தார்.

"ஐயா கூச்சல்கேட்டதும் வந்து பார்த்தேன். இப்படிக் கிடந்தார். பதறியடிச்சிக்கிட்டு வெளியே ஓடியாந்தப்போ என்னைக் கீழே தள்ளிட்டு யாரோ ஒருத்தர் கொல்லைப்பக்கமாக ஓடினுர். நானும் அவர்கூடவே ஓடினேன். ஆனுல் ஆளு சுவரேறிக் குதிச்சு மாயமாய் மறைஞ்சிட்டாரு. தெருப்பக்கமாக ஓடியாந்தப்போ தான் போலீஸ்ஐயா ரெண்டுபேரும் வந்துகிட்டிருந்தாங்க" என்று மூந்திக் கொண்டு சாட்சியம் கொடுத்தான் வேலைக்காரன். அவன் சொன்னதை அரைகுறையாகக் காதில் வாங்கிக் கொண்டு, பிணத்தின் அருகில் சென்றுபார்த்தார். வழக்கமாக இருக்கும் கத்தியைப்பார்த்தார். நெஞ்சிலேயே ஆழப்பதிந் திருந்தது, அந்த மலையாளக் கொடுவாள். பிடியில் கட்டப்பட் டிருந்த சிட்டைப் படித்துப்பார்த்தார்.

> **"வி—ரோ—தி' திட்டத்தில் மூன்ருவது கொலை. இதுவே கடைசிக் கொலையுங்கூட. புஷ்பாவை ஏமாற்றிக் கையெழுத்து வாங்கிய குற்றத்திற்குத் திருஞானம் கொலை. அவளுக்குப் பங்கு இல்லை என்று வீராப்போடு சொல்லி, சொத்தைப் பூராவும் தனக்கே வைத்துக் கொள்ளத் திட்டமிட்ட ரோஹிணி செய்த குற்றத் திற்கும் இதே தண்டனைதான். டாக்டர் விமலநாதனும் இதே போன்ற குற்றம் செய்ததற்காகத்தான் கத்திக் குத்துடன் துடித்துத் துடித்துச் செத்தார்.**
>
> **'வி—ரோ—தி' ஒழிப்பாளன்"**

இதைப் படித்துவிட்டு இன்ஸ்பெக்டரிடம் காட்டினுர். அவரும் திருஞானத்தின் நெஞ்சிலிருந்த கத்தியைப் பிடுங்காமலே சிட்டைப் படித்தார். அறையெல்லாம் நோட்டம் போட்டுக் கொண்டே வந்த சுகுமாரன், மூலையில் கிடந்த படம் ஒன்றைக் கையிலெடுத்தான். அது கண்ணுடி உடைந்துவிட்டிருந்தது. திருஞானத்தின் படம்தான் அது.

கட்டிலுக்குக் கீழே வெள்ளைக்காகிதம் ஒன்று தெரிவதைக் கண்ட சுகுமாரன் அதை எடுத்துப்பார்த்தான். ஏதோ ஒரு பத்திரம் அது. இரண்டு புறமும் குறுக்காகச் சிவப்பு மையால் கோடுகிழிக்கப்பட்டிருந்தது. படித்துப்பார்த்தான். புஷ்பா எழுதிய உயில் அது. அதன் சாராம்சம் இதுதான்.

வாழ்க்கையில் தான் தவறிவிட்ட குற்றத்துக்குப் பிராயச்சித்தம் செய்வதற்காக தான் துறவியாகப் போவதாகவும், சகோதரி ரோஹிணி பொதுச் சொத்தென்றும் பாராமல் கணவனுக்கு வாரிக்கொடுப்பது தனக்கு பிடிக்கவில்லையாகையால் பூர்வீகச் சொத்து பாதுகாக்கப்படவேண்டுமென்ற எண்ணத்துடன் தான், மாமா திருஞானத்துக்குத் தன் பாகத்தை எழுதி வைத்திருப்பதாகவும் எழுதப்பட்டிருந்தது. முடிவில் புஷ்பா கையெழுத்துப் போட்டிருந்தாள்.

பத்திரத்தை எல்லோரும் படித்துப் பார்த்தனர். பிறகு திருஞானத்தின் நெஞ்சில் புதைந்திருந்த பிச்சுவாவைச் சிறிது கஷ்டப்பட்டுப் பிடுங்கிப் பத்திரமாக வைத்துக் கொண்டார் பீதாம்பரம். இத்தனை விவரங்களையும் கவனித்தபிறகுதான் வேலைக்காரனைப்பற்றிய எண்ணமே வந்தது.

“உன்னைத் தள்ளிவிட்டு ஒரு ஆள் ஓடினனென்று சொன்னுயே, அந்த ஆளை உன்னுல் அடையாளம் கண்டுபிடிக்க முடிந்ததா?” என்று கேட்டார் பீதாம்பரம்.

“சரியாகத் தெரியலிங்க” என்று ஆரம்பத்திலேயே கையை விரித்தான் வேலைக்காரன். பீதாம்பரம் தளர்ந்துவிடவில்லை. “கனமா உயரமாக இருந்தானு?

“மனோஹர் ஐயா கூடத்தான் அப்படியிருப்பாரு. அதுக்காக அவருதான்னு சொல்லமுடியுமா?” என்று கோபத்தோடு கேட்டான் வேலைக்காரன்.

பீதாம்பரத்துக்குச் சுரீர் என்றது அவன் கேள்வி. மனோஹரன் இங்கு எப்படி வந்தான். அவன்தான் இத்தனை கொலைகளையும் செய்தானோ என்பதை நினைக்கும்போதே பீதாம்பரத்துக்குத் தலை சுற்றியது.

“மனோஹர் இல்லை என்ருல் பின் வேறு யாராக இருக்கும்? ஒரு வேளை மனோஹரனே ஓடியிருந்தால்?”—வேலைக்காரனின் வாயிலிருந்து விஷயத்தைப்பிடுங்க இப்படிக் குறுக்குக் கேள்விகளைக் கேட்டார் பீதாம்பரம்.

“நாக்கிலே எலும்பில்லாததனுலே அப்படித்தான் எஜமான் பேசத்தோணும். பிள்ளைக்குப் பிள்ளையாக மனோஹர் ஐயாவை எஜமான் பாத்தாரு. அவரா போயும் போயும் இந்த அநியாயத்தைச் செய்வாரு?” என்று ஆத்திரத்தோடு கேட்டான் வேலைக்காரன்.

“அப்படியானுல் மனோஹர் இருக்கவேண்டுமே? இல்லையே?”

"அக்காவீட்டுக்குப்போறேன்னு சாயங்காலந்தான் போனுரு"

"அதுசரி,...நீ, உங்க எஜமான், மனோஹரன் இந்த மூன்று பேரையும் தவிர இங்கே வேறு யாரும் கிடையாதா"

"ஏன் புஷ்பா அம்மா இல்லையா என்ன ?"

பீதாம்பரத்துக்கு இதைக்கேட்டதும் இரண்டாவது முறையாகத் தலை சுற்றியது. நிலைமையை ஒரு மாதிரியாகச் சமாளித்துக் கொண்டு மேலும் கேள்விகேட்டார்.

"புஷ்பாவாவது இருக்கிறாளல்லவா ?

"அந்த அம்மாவையும் சாயங்காலமே புடிச்சிக் காணோம். மனோஹர் ஐயா வெளியே போனுரு. புஷ்பா அம்மாவைக் காணவே காணோம். சின்னஞ்சிறுசுக மனசறிஞ்சு வீட்டுக்குப் பெரியவங்க நடந்துகிட்டா அவங்க ஏன் இப்படி நடக்கணும ?" என்று பேசிக்கொண்டே போனுன் வேலைக்காரன்.

கொலையுண்ட பிணத்தைப் போட்டுக்கொண்டு கதை பேசிக் கொண்டு நிற்கப் பீதாம்பரத்துக்குப் பிடிக்கவில்லை. வேலைக்காரனை ஸ்டேஷனில் போய் விசாரித்துக் கொள்ளலாம் என்ற முடிவுடன் வெளியே கிளம்பினுர். உமாபதிக்கும் மற்ற கான்ஸ்டபிள்களுக்கும் திருஞானத்தின் சடலத்திற்கு ஆகும் சடங்குகளைக் கவனிக்கும் பொறுப்பு விழுந்தது.

திருஞானத்தின் வேலைக்காரன் சொன்ன தக்வல்களிலிருந்து மனோஹரன் திருவொற்றியூரிலுள்ள தன் சகோதரியின் வீட்டுக்குச் சென்றிருக்கிறுன் என்பதை அறிந்துகொண்டார் பீதாம்பரம். ஆனுல் அவன் புஷ்பாவைப்பற்றிச் சொல்லிய தகவல்கள் தான் குழப்பமாகவும் நம்பத்தகாத தாகவுமிருந்தன. புஷ்பாசுமார்நான்கு மாதங்களுக்கு முன்தான் அவர்கள் வீட்டுக்கே வந்து சேர்ந்தாளாம். அதற்கு முன்பு வேலைக்காரன் அவளைப்பார்த்ததேயில்லையாம். ஆனுல் மனோஹரன் ஏழெட்டு வருஷங்களாகத் திருஞானத்தின் வலது கைபோல இருந்து வருகிறுனும். திருஞானத்தை அவன் கொன்றிருப்பானென்று பீதாம்பரம் சொன்னதை எவ்வளவு முரட்டுத்தனமாக மறுத்துப் பேசிக்கொண்டே வந்தான் வேலைக்காரன் ? புஷ்பா அனுதையாகச் சென்னைத் தெருக்களில் சுற்றிக்கொண்டிருக்கையில் தாம் அழைத்து வந்ததாக அவனிடம் திருஞானம் சொன்னுராம். இந்தத் தகவல் மட்டும் பச்சைப் புளுகு என்று பீதாம்பரததுக்குத் தெரிந்துவிட்டது. அவன் சொன்ன மற்ற விவரங்களில் ஒரு வார்த்தையைக்கூட அவரால் புரிந்து கொள்ள முடியவில்லை.

வேலைக்காரனைச் சற்று விலக்கிவைத்துவிட்டு அமைதியாக உட்கார்ந்து சிந்தித்துப் பார்த்தார் பீதாம்பரம். புஷ்பா தன் மனைவி என்று ரோஹிணி கொலைசெய்யப்பட்ட அன்று இரவு மனோஹரன் சொல்லியதில் அவருக்கு நம்பிக்கை வரவில்லை. ஏனென்றால், ஏழு வருடங்களுக்கு மேலாக மனோஹரன் திருஞானத்திடம் இருந்திருக்கிறான். புஷ்பா நான்கு மாதங்களுக்கு முன்தானே வந்து சேர்ந்ததாக வேலைக்காரன் சொல்லுகிறான்? அவள் யாருடனோ ஓடிவிட்டாள் என்றல்லவா டயரி சொல்லுகிறது? சுகுமாரன் விசாரித்த கிழவியும் சொல்லுகிறாள்?

எதை எதையோ போட்டுக் குழப்பிக்கொண்ட பீதாம்பரத்துக்கு ஒன்றுமே புரியவில்லை. திருவொற்றியூருக்குச் சென்று மனோஹரனைத் தேடிக்கண்டு பிடித்தால்தான் இந்த மர்ம முடிச்சை அவிழ்க்கலாம் என்று அவருக்கு முடிவாகத் தோன்றியது. அங்கு சொல்லாமல் அவன் வேறு எங்காவது தலைமறைவாகச் சென்றிருக்கலாம் என்ற எண்ணத்தில் மூலைக்கு ஒருவராக அனுப்பி விட்டு பீதாம்பரமும் சுகுமாரனும் திருவொற்றியூருக்குக் கிளம்பிச் சென்றார்கள்.

இன்ஸ்பெக்டர் ஏகாம்பரத்துக்கு இருப்புக் கொள்ளவில்லை. இத்தனை அராஜகங்கள் நடந்துவிட்டன. தம் கையைக் கட்டி வைத்திருக்கும் அந்த மர்மக்கயிறை இதுவரை அறுத்தெறியத் தான் முடியவில்லை. இனிமேலாவது இதற்கு ஒரு முடிவு காண வேண்டும், குற்றவாளிகளைக்கண்டு பிடிக்கவேண்டும் என அவர் உள்ளம் கொதித்தது. அங்கங்கே மனோஹரனின் அடையாளங்களைச் சொல்லி ஜரூர்ப்படுத்திக் கொண்டிருந்தார். மொத்தத்தில் போலீஸார் சென்னை நகரத்தையே வலைபோட்டு அரித்துக் கொண்டிருந்தனர்.

திருவொற்றியூரில் மனோஹரனின் சகோதரியின் வீட்டைக் கண்டுபிடிக்கச் சுற்றுச் சுற்று என்று சுற்றித் துப்பறியும் நிபுணர்கள் இருவரும் சோர்ந்து போயிருக்கையில், மனோஹரனின் அக்காள் கணவரே அவர்களுக்கு உதவுவதற்கு முன் வந்தார். அவரிடமே போய் வழிகேட்டால் அவர் சொல்லவா மாட்டார்? மனோஹரன் தங்கள் வீட்டுக்கு வரவேயில்லையென்று அவர் சாதித்தார். மேலும், அவர் சில தகவல்களையும் சொல்லாமலில்லை.

"வாரத்துக்கு ஒருமுறை அவன் எங்கள் வீட்டுக்கு வந்து போய்க் கொண்டுதானிருந்தான். ஆனால் இப்போது கொஞ்ச நாட்களாக இந்தப் பக்கமே வருவதில்லை. புஷ்பா என்று ஒரு

பெண்ணைச் சுற்றிக்கொண்டே தானிருக்கிறன், அவனுடைய எஜமான் வீட்டிலிருக்கிருளாம் அவள்" என்ருர்.

வழியிலேயே விவரத்தைச் சொல்லித் தங்களைத் திருப்பி அனுப்பிவிடப் பார்க்கிருரோ என்று சந்தேகப்பட்ட பீதாம்பரம் பேச்சுக் கொடுத்துக் கொண்டே அவர் வீட்டுக்கு வந்து சேர்ந்தார்.

"உங்களுக்குத் தெரிந்திருக்காது. ஒருவேளை அவன் வந்திருந்து காலையில் போயிருந்தாலும் போயிருக்கலாம் பாருங்கள். ஆனலும் மனேஹரனின் அக்காவையே கேட்டு விடுகிறேனே" என்ருர் பீதாம்பரம்.

"போலீஸ்காரர்களே சந்தேகிகள் தான். உங்கள் மனம் ஏன் அதிருப்திப்பட வேண்டும்" என்று சொல்லி விட்டுத் தம் மனைவியை அழைத்தார் மனேஹரனின் அத்தான்.

அந்த அம்மாள் அடக்கவொடுக்கமாக வந்து நின்ருள். பீதாம்பரத்தை முந்திக் கொண்டு அவள் கணவர் விவரத்தைச் சொன்னர். அதைக்கேட்டதும் அவள் கதறி அழுது விட்டாள். "அவன் இங்கு வரவேயில்லையே. என் தம்பி அப்படியெல்லாம் செய்யவே மாட்டானே" என்று துடியாய்த் துடித்தாள்.

இத்தனை அமர்க்களப்படுத்துகிருள் உடன்பிறந்த அக்கா. இந்த மனிதரென்ருல் அதைப்பற்றி ஒரு வார்த்தை கூடப் பேச வில்லையே, 'ஓஹோ ஓஹோ' என்று கேட்டார். அதோடு நின்று விட்டாரே? இருவரும் கூட்டுக் கள்ளனய் ஏன் இருக்கக் கூடாது? என்ற நினைப்பில் சுற்றுநேரம் யோசனை யாயிருந்தார் பீதாம்பரம். சுகுமாரன் வழக்கம்போலவே வீட்டைச் சோதனை போடுவதுபோல பார்வையை அலைய விட்டுக் கொண்டிருந்தான்.

"ஏன் ஸார்! உங்கள் மைத்துனர் பெரிய கொள்ளையைச் செய்து விட்டாரென்று போலீஸார் அவரைப் பிடிக்க நாலா பக்கமும் அலைகிருர்கள். உங்களுக்கு அதைப் பற்றிக் கொஞ்சங் கூடக் கவலையிருப்பதாகவே தெரியவில்லையே!" என்று ஆச்சரியப்படுபவர் போல கேட்டார் பீதாம்பரம்.

அவர் இலேசாகச் சிரித்தார். "எனக்கு மனேஹரன் மீது கடுகளவுகூடச் சந்தேகம் இடையாது. ஏனென்ருல், அவன் குணம் அப்படி. வேண்டுமானல் அவனைத்தேட உங்களுடன் நானும் வருகிறேன்" என்ருர்.

பீதாம்பரத்துக்கு அவருடைய அமைதி தூக்கி வாரிப் போட்டது. ஒன்றும் பேசிக் கொள்ளாமல் சென்னையை நோக்கி நடையைக் கட்டினர்.

நகருக்குள் வந்து சேரும்போது மாலை ஆறுமணியாகி விட்டது. விறு விறுவென்று போலீஸ் ஸ்டேஷனை நோக்கி நடந்தனர். நான்கு நாட்களாக இரவு பகலென்று பாராமல் சுற்றிக் கொண்டிருந்த களைப்பு சுகுமாரனைத் தள்ளாடச் செய்தது. பீதாம்பரம் கூடச் சோர்ந்து விட்டார். ஆனல் இத்துடன் ஓய்வெடுத்துக்கொள்ள அவர் மனம் விரும்பவில்லை. அவர் பிறவிக் குணமே அப்படி. ஒரு காரியத்தை முடிக்க வேண்டுமென்று முனைந்துவிட்டாரானல் அதன் அந்தம் வரை சென்று வெற்றி மாலை சூடாமல் திரும்பவே மாட்டார். போலீஸ் இலாகாவிலுள்ள எல்லோருக்கும் இப்படிப்பட்ட குணம் இருந்து விட்டால் உலகத்தில் குற்றம் என்ற ஒன்று இருக்கவே இருக்காது!

துப்பறியும் நிபுணர்கள் இருவரும் பிரமிக்கத்தக்கபடி அவர்களுக்காகக் காத்துக் கொண்டிருந்தது ஓர் ஆச்சரியமான விஷயம். வேறு ஒன்றுமில்லை. மனோஹரனை ஒரு மணி நேரத்துக்கு முன் போலீஸார் கைது செய்து விட்டனர். அவன் இன்ஸ்பெக்டர் ஏகாம்பரத்தினருகில் விலங்கிடப்பட்டு நின்று கொண்டிருந்தான். இதைக் கண்டதும் மகிழ்ச்சியால் துள்ளிவிட்டார் பீதாம்பரம். ஆனல் அடுத்த கணமே அவர் உள்ளம் படபடத்தது. மனோஹரன் மட்டும் தான் அகப்பட்டானு? புஷ்பா எங்கே?

பயந்துபோய், இன்ஸ்பெக்டரிடம், "புஷ்பாவைக் கண்டு பிடிக்க வில்லையா?" என்றுகேட்டார்.

"மனோஹரனையே கேட்டுப்பாருங்கள். நீங்கள் கேட்டாலாவது சொல்லுகிருனு என்று பார்க்கலாம்" என்ருர் ஏகாம்பரம்.

பீதாம்பரம், முகத்தில் கேள்வி தொனிக்கும் பாவனையில் மனோஹரனைப்பார்த்தார். அதைப்புரிந்து கொண்ட மனோஹரன் சொன்னன்:

"என்னை எதற்கு இங்கே கொண்டு வந்திருக்கிறீர்கள் என்றே தெரியவில்லை. புஷ்பாவை எங்கே என்று எனக்குத் தெரியாது. இதோ இந்த இரண்டு கடிதங்களையும் படித்துவிட்டு என் பேச்சை நம்பலாம்" என்று தன் சட்டைப்பையிலிருந்த இரண்டு கடிதங்களை எடுத்துப் பீதாம்பரத்திடம் கொடுத்தான் மனோஹரன்.

முதல் கடிதத்தில் புஷ்பா, தன்னை இரவு பதினொரு மணிக்கு புரசைவாக்கம் கிருஷ்ணாலாட்ஜில் பார்க்கும்படி எழுதியிருக்கிறாள். இரண்டாவது கடிதத்தில், "கிருஷ்ணா லாட்ஜில் சில வசதிக் குறைவுகளால் தங்குவதற்கு இயலாமற்போய் விட்டது. லிங்கிச்செட்டி தெருவில் ஜானகி லாட்ஜில் தங்கியிருக்கிறேன். உடனே வந்து சந்தியுங்கள்" என்று எழுதியிருந்தாள்.

"முதல் கடிதம் உனக்கு எப்போது கிடைத்தது?" என்று கேட்டார் பீதாம்பரம்.

"நேற்று மாலை கிடைத்தது. எஜமான் வீட்டில் நான் வெளியே நின்று கொண்டிருந்தேன். என் பின்னாலே வெளியே வந்த புஷ்பா என் கையில் அந்தக்கடிதத்தை வைத்துத் திணித்து விட்டு, வீட்டுக்குள் போய் விட்டாள். முதலாளிக்கு எதிரில் அவள் என்னுடன் பேசப்பயந்துதான் அப்படி ரகசியமாகக் கடிதத்தைக் கொடுத்தாள்" என்றான் மனோஹரன்.

"ஓஹோ! அப்படியானால் ஹோட்டல் மாயாவுக்கு கணவனும் மனைவியுமாக அன்று வந்தீர்களே! அதற்கு மட்டும் நீங்கள் இரண்டுபேரும் பயப்படவில்லையா?"

மனோஹரன் ஏதோ பேச வாயெடுத்தான். இதற்குள் வெளியேயிருந்து ஒரு கான்ஸ்டபிள் வந்து நாராயணனின் சித்தப்பா கோபி வந்திருப்பதாகவும், உடனே பீதாம்பரத்தைப் பார்க்க வேண்டுமென்று அவர் விரும்புவதாகவும் தெரிவித்தான். பீதாம்பரம் வெறுப்போடு வெளியே வந்தார். கோபி, நாராயணன் பல்லவியையே தான் பாடினார். பீதாம்பரம் அவருக்கு வேண்டிய ஆறுதல்களையெல்லாம் சொல்லி வெறுங்கையுடன் அனுப்பினார்.

தமது கேள்விக்குப் பதிலளிக்காமல் மனோஹரன் நின்று கொண்டிருப்பதைக் கண்டதும் சந்தேகப்பட்டு மீண்டும் அதே கேள்வியையே கேட்டார் பீதாம்பரம்.

"அப்படி நாங்களாக நடந்து கொண்டதில்லை. முதலாளி தான் அப்படி நடக்கச் சொன்னார்."

"கணவன் மனைவி மாதிரி நடந்து கொள்ளும்படியாகவா?"

"ஆமாம். ரோஹிணிக்கு சித்தப் பிரமை பிடித்திருப்பதாகவும் அவளுடன் இதமான வார்த்தைகளைப் பேசியே திருத்த வேண்டுமென்றும் சொன்னார். அதன்படியே நாங்கள் நடந்து கொண்டோம். ஆனால் வீட்டுக்கு வந்து விட்டால் ஒருவருக்

கொருவர் நாங்கள் பேசிக் கொள்ளக் கூடாதென்று கண்டிப்பாகச் சொன்னார்."

"ரோஹிணி கொலை செய்யப்பட்ட பிறகு போலீஸார் விசாரித்தபோது புஷ்பா உன் மனைவியில்லை என்ற சொல்வதற்கு என்ன வந்து விட்டது ?"

"அதனால் என் எஜமானர் ஏதாவது ஆபத்தில் சிக்கிக் கொள்ளுவாரோ என்று பயந்து தான் சொல்லாமலிருந்து விட்டேன்"

"வேடிக்கையாயிருக்கிறது. அது சரி......புஷ்பா யார்...... உன் முதலாளி வீட்டில் எதற்காக இருக்கிருள் என்பதையாவது தெரிந்து கொண்டாயா ?"

"முதலாளியே தான் புஷ்பா வந்த அன்று சொன்னார். அவள் தம் நண்பர் ஒருவருடைய பெண் என்றும், நண்பர் திடீரென்று இறந்து விடவே, புஷ்பாவை வளர்க்கும் பொறுப்பு தம் மீது விழுந்து விட்டதாகவும் கூறினார். புஷ்பாவுக்கு வேறு ஆதரவில்லையாதலால் எனக்கே கல்யாணம் செய்து தருவதாக அன்று நாங்கள் ஹோட்டல் மாயாவுக்கு வரும்போது என்னிடம் தனியாகச் சொன்னார்."

"புஷ்பா, தன்னைப் பற்றி உன்னிடம் ஒன்றும் சொல்லிக் கொள்ள வில்லையாக்கும் ?"

"இல்லை. அதைப்பற்றி விசாரித்தால் அவள் அழுதுவிடுவாள். ஒன்றிரண்டு முறை பார்த்து விட்டு அவளை ஒன்றும் விசாரிக்கக் கூடாதென்றிருந்து விட்டேன்"

"சரி ! எப்படியாவது அவள் இருந்து விட்டுப் போகிருள். புஷ்பா உன்னிடம் கடிதத்தைக் கொடுத்ததும் என்ன செய்தாய் ?"

"வீட்டுக்குப் பக்கத்திலுள்ள தெரு விளக்கு வெளிச்சத்தில் படித்தால் எஜமான் சந்தேகப்படுவார் என்று, பக்கத்துத் தெருவுக்குச்சென்று அங்குள்ள தெரு விளக்கின் வெளிச்சத்தில் கடிதத்தைப் படித்தேன். நல்ல வேளையாக என்னிடம் கையில் கொஞ்சம் பணம் இருந்தது. அந்த நேரம் பார்த்து வேலைக்காரன் அந்தப் பக்கமாக வந்து கொண்டிருந்தான். அவனிடம், திருவொற்றியூருக்கு என் அக்கா வீட்டுக்குப் போவதாக எஜமானிடம் சொல்லி விடும்படி புளுகிவிட்டு பஸ் ஸ்டாண்டுக்கு ஓடினேன். பத்து மணிக்கு ஒரு பஸ் சென்னைக்குப் புறப்பட்டது.

புரசைவாக்கத்தில் கிருஷ்ணு ஹோட்டலுக்குச் சென்றேன். ஹோட்டல் மானேஜரிடம் புஷ்பாவின் அறை எங்கிருக்கிறது

என்று கேட்டதும் அவர் ஒரு கடிதத்தை என்னிடம் கொடுத்தார். அந்தக் கடிதத்தில் புஷ்பா எழுதியிருந்தபடி, அந்த அகால வேளையில் ஜானகி லாட்ஜுக்கு என்னால் செல்ல முடியவில்லை. கிருஷ்ணா லாட்ஜிலேயே ரூம் ஒன்றில் தங்கி விட்டு அதிகாலையில் புஷ்பாவைத் தேடிக்கொண்டு சென்றேன். அங்கேயும் ஹோட்டல் மானேஜர், புஷ்பா எனக்காக நேற்றிரவு வெகுநேரம் காத்துக் கொண்டிருந்ததாகவும், அவளுடன் ஒரு ஆண் இருந்ததாகவும் அவருடன் அவள் இரண்டு மணிக்கெல்லாம் டாக்ஸி பிடித்துக் கொண்டு எங்கேயோ போய்விட்டதாகவும் சொன்னார். அதோடு தன் அறையிலேயே என்னைத் தங்கியிருக்குமாறும் சீக்கிரமாகவே திரும்பி விடுவதாகவும் சொல்லி விட்டுச் சென்றாளாம். நான் சாயங்காலம் வரை காத்திருந்தும் புஷ்பா வரவேயில்லை.

"வெளியே போய் விட்டுத் திரும்பி வரலாமென்று ஹைகோர்ட்டுப் பக்கம் வந்தேன். அப்போதுதான் என்னை இரண்டு போலீஸ்காரர்கள் இங்கே கூட்டிக் கொண்டு வந்தார்கள்" என்றான் மனோஹரன்.

உண்மையை மறைத்து வெகு தந்திரமாகப் புளுகுகிறான் என்று உணர்ந்த பீதாம்பரத்துக்குக் கோபம் சிரசை முட்டிக் கொண்டு வந்தது.

"மனோஹரா! அன்றைக்கு ஹோட்டல் மாயாவில் நடந்த கொலைக்காக உன்னை விசாரித்தபோது உன் பேச்சை நம்பியதால் இன்றைக்கு இவ்வளவும் நடந்துவிட்டது. உண்மையில் நடந்ததைச் சொல்லிவிடு" என்று ஆக்ரோஷத்தோடு அவன் நெஞ்சைப்பிடித்து முன்னுக்கு இழுத்தார்.

"நான் எதைச்சொல்ல? என்னை வீணில் துன்புறுத்துகிறீர்கள்" என்றான் மனோஹரன். அவன் பார்வையில் பரிதாபம் வெளிப்பட்டது.

"எதைச் சொல்ல வேண்டும் நீ? டாக்டர் விமலநாதனைக் கொன்றது எதற்காக? ரோஹிணி உனக்கு என்ன துரோகம் செய்து விட்டாள், அவளைக் கொன்றாய்? உன்னைப் பெற்ற மகன் போலச் சீராட்டி வளர்த்த திருஞானம் பிள்ளையைக் கொன்றாயே, அது எதற்காக?"

இதைக் கேட்டதும் மனோஹரன் திடுக்கிட்டுப் போய்ப் பீதாம்பரத்தைப் பார்த்தான். அவன் உடலெல்லாம் கிடு கிடுவென்று நடுங்கத் தொடங்கி விட்டது. "எஜமான் கொலை செய்யப்பட்டு விட்டாரா? எப்போது ஸார்?" என்று வாய் உளறியபடி கேட்டான்.

"உண்மையை மறைத்துப் பேசாதே" என்று கண்டிப்பாகக் கூறினர் பீதாம்பரம்.

"தெய்வ சாட்சியாக எனக்கு ஒன்றும் தெரியாது ஸார்" என்று சொல்லி விட்டுப் பீதியோடு பீதாம்பரத்தை நோக்கினன். திடீரென்று அவன் கண்கள் குறுகி விழித்தன. முகம் சிவந்தது. பல்லை நறநறவென்று கடித்தான்.

"கிராதகி. அவளாகத்தானிருக்க வேண்டும். எனக்குப் போக்குக் காட்டிவிட்டு அவள் தான் கொலை செய்திருக்கவேண்டும். அவள் மையலில் சொக்கி அவளையே சுற்றிக் கொண்டிருந்த நான், அவள் திட்டத்துக்குக் குறுக்கே நிற்கிறேனென்று எண்ணித்தான் என்னை ஹோட்டல்தோறும் விலாசம் கொடுத்து அலைய வைத்திருக்கிருள், சண்டாளி" என்று கோபத்தோடு பேசினன் மனோஹரன்.

பீதாம்பரம் மேற்கொண்டும் கேள்வி கேட்பதை நிறுத்தி விட்டார். மனோஹரன் சொல்லுவதிலும் ஏன் உண்மை இருக்கக் கூடாது? மனோஹரனுக்கு முந்தி கிருஷ்ணு லாட்ஜுக்கு வந்து கடிதம் கொடுத்துச் சென்றிருக்கிருள் புஷ்பா. ஜானகி லாட்ஜிலிருந்து இரவு இரண்டு மணிக்கெல்லாம் புறப்பட்டிருக்கிருள். அதுவும் கூட ஓர் ஆண் பிள்ளை இருந்தானும். இந்த இடை நேரத்தில் தானே கொலை நடந்திருக்கிறது? இப்படி வைத்துக் கொண்டு யோசித்தால் புஷ்பா மனோஹரனுக்குப் போக்குக் காண்பிக்கவே அவ்வாறு செய்திருக்கிருள் என்று தெரிகிறது. ஆகவே புஷ்பாவை உடனே கண்டுபிடிக்க வேண்டும்......இந்த முடிவுடன் விறுட்டென்று எழுந்தார் பீதாம்பரம்.

மனோஹரனைப் பாதுகாப்பில் வைத்திருக்கும்படி சொல்லி விட்டு சுகுமாரனேயும் ஏகாம்பரத்தையும் தம்முடன் உடனே வெளியே வருமாறு முடுக்கினர்.

"மிஸ்டர் ஏகாம்பரம்! புஷ்பாவைத் தேடுவதற்கு உடனே சரியான ஏற்பாடு செய்ய வேண்டும். ரயில்வே ஸ்டேஷன்களுக்கெல்லாம் உடனே ஆட்களை அனுப்ப வேண்டும். அநேகமாக ரயில்களெல்லாம் சாயங்காலம் ஏழு மணிக்கு மேல்தான் புறப்படுகின்றன" என்று சொல்லிவிட்டு கீழே உட்கார்ந்து விட்டார். சிறிது நேரத்தில் அவர் மனக்கண்முன் எல்லா நிகழ்ச்சிகளும் தோன்றி மறைந்தன. முதல்நாள் கடிதம் வந்தது, டாக்டர் விமலநாதன் கொலையுண்டது ஹோட்டல்,கிளார்க் வைத்திய நாதன் அநியாயமாகக்கொல்லப்பட்டது எல்லாமே க்ஷணநேரத்

திற்குள் அவர் நினைவுத் திரையில் பளிச்சிட்டன. சட்டென்று எழுந்து,

"சுகுமாரா! டைப் அடிக்கப்பட்ட சீட்டுகளும், சுந்தர மூர்த்தியின் டைப் செய்யப்பட்ட கடிதமும் உன்னிடம் இருக்கிற தல்லவா? இல்லாவிட்டால் உடனே வீட்டுக்குப்போய் எடுத்துக்கொண்டுவா" என்று அவசரமாகச் சொன்னார்.

"அதெல்லாம் என்னிடம் தானிருக்கிறது. ஏன், வேண்டுமா?"

"இப்போது வேண்டாம். பத்திரமாக வைத்துக்கொள்" என்று சொல்லிவிட்டு, இன்ஸ்பெக்டரிடம் திரும்பி, "மணி என்ன?" என்று கேட்டார்.

"இப்போது ஏழு மணி"

"இதற்குள் கடற்கரைக்குப் போய்விட்டு ஜனங்களெல்லாம் வீட்டுக்குத் திரும்பி யிருப்பார்களோ?"

"எல்லோரும் போயிருக்க மாட்டார்கள். அநேகர் ஏழரைக்கு மேல்தான் கிளம்புவார்கள்."

"அப்படியானால் ஹோட்டல் மாயாவில் கூட்டம் இருக்கும்?"

"அங்கே எட்டரை மணி வரைக்கும் நிறையக் கூட்டம் இருக்கும். அதற்குமேல் சுமாராகத்தான் கும்பல் இருக்கும்".

"சரி, அப்படியானால் புஷ்பாவைத் தேட ஆட்களை அனுப்பி விட்டு உடனே என்னுடன் புறப்படுங்கள்" என்று பறந்தார் பீதாம்பரம்.

இன்ஸ்பெக்டருக்கு ஒன்றுமே புரியவில்லை. 'சட் புட்' என்று வேலைகளை முடித்துக் கொண்டு பீதாம்பரத்திடம் வந்தார். மணியைப் பார்த்தார் பீதாம்பரம். ஏழு ஐந்தாகி விட்டது. மூவருமாக ஜீப்பை நோக்கிச் சென்றனர். எல்லோரும் ஏறிக் கொண்டதும் கண்ணை மூடிக் கொண்டு காரைச் செலுத்தினார் பீதாம்பரம்.

கார் ஹோட்டல் மாயாவின் முன் வந்து நின்றதும் பீதாம்பரமும் மற்றவர்களும் இறங்கினார்கள். போலீஸ் ஸ்டேஷனில் இருந்த பரபரப்பு இப்போது பீதாம்பரத்திடம் இல்லை. வெகு நிதானமாக நடந்தார். இன்ஸ்பெக்டர் பக்கம் திரும்பி,

"நீங்கள் எங்களுடன் இருக்க வேண்டாம். கணக்குப் பார்க்கும் ஆபீஸ் அறைக்குள் ரகசியமாக உட்கார்ந்திருங்கள். ஒரு போலீஸ் இன்ஸ்பெக்டராகிய நீங்கள் இந்த ஹோட்டலுக்

குள்ளே இருக்கிறீர்கள் என்ற உணர்வு ஒருவருக்கும் தோன்ருத படி அவ்வளவு தூரம் ஒளிந்து கொண்டிருக்க வேண்டும். ஒரேயடியாகக் கதவைச் சாத்திக் கொண்டு விடாதீர்கள். நாங்கள் இருவரும் உங்களுக்குத் தெரியும்படி கதவை ஒருக்களித்துச் சாத்திவிட்டு என்னையே கவனித்துக் கொண்டிருங்கள். எந்த நேரமும் நீங்கள் தயாராயிருக்க வேண்டும். துப்பாக்கி சரியாயிருக்கிறதா என்று பார்த்துக் கொள்ளுங்கள். ஒரு கை எப்போதும் துப்பாக்கியிலேயே இருக்க வேண்டும். ஒரு வேளை உங்கள் துப்பாக்கிக்கு இன்று வேலை யிருக்கும்" என்று பேசிக் கொண்டே ஹோட்டலுக்குள் நுழைந்தார் பீதாம்பரம். இன்ஸ்பெக்டருக்குப் பீதாம்பரம் சொல்வதெல்லாம் புதிர் போலிருந்தன.

பீதாம்பரம் ஜாடை காட்டியபடி இன்ஸ்பெக்டர், ஆபீஸ் அறைக்குள் சென்று விட்டார். அங்கு யாருமேயில்லை. கதவை இலேசாகச் சாத்திவிட்டுப் பதுங்கிப் போய் ஒரு நாற்காலியில் உட்கார்ந்திருந்தார். பீதாம்பரம் ஹோட்டல் மானேஜரைத் தனியாக அழைத்துச் சென்று பேசினர்.

"உங்கள் ஆபீஸ் அறைக்குள் இன்ஸ்பெக்டர் உட்கார்ந்திருக்கிருர். யாரையும் உள்ளே போகவிடாதீர்கள். நாங்கள் இருக்கிறேமென்று யாருக்குமே தெரிய வேண்டாம். வைத்திய நாதனைக் கொன்றவனை இன்னும் அரை மணி நேரத்தில் கண்டு பிடித்துத் தருகிறேன்" என்ருர். ஹோட்டல் மானேஜர் எல்லாவற்றுக்கும் தலையை ஆட்டிக் கொண்டு வந்தவர், வைத்திய நாதனைக் கொன்றவனை அரை மணி நேரத்தில் பிடித்துவிடுவதாகச் சொன்னதும் ஆச்சரியத்தால் வாயைப் பிளந்தபடி நின்று விட்டார். அவர் அப்படியே நிற்கட்டும், வாய்க்குள் வண்டோ, ஈயோ புகுந்து, பிறகு விழித்துக்கொள்ளட்டும் என்று மானேஜரை அங்கேயே விட்டு விட்டு நகர்ந்தார் பீதாம்பரம்.

மாடிக்குச் செல்லும் படிக்கட்டுகளுக்குக் கீழே சிறிது இடைவெளியிருந்தது. ஹோட்டல் வருமானத்தைக் கருதி அங்கும் மேஜை நாற்காலிகளைப் போட்டிருந்தனர். அந்த இடம் சற்று வெளிச்சமற்றிருந்தது. அதுதான் சரியான இடமாகத் தோன்றியது பீதாம்பரத்துக்கு. மேலும் அங்கிருந்தால் ஆபீஸ் அறையினுள் இருக்கும் ஏகாம்பரம் தங்களை நன்ருகப் பார்க்கவும் முடியும் என்று எண்ணினர் பீதாம்பரம்.

இருவரும் மறைவில் கிடந்த நாற்காலிகளில் எதிரெதிரே உட்கார்ந்து கொண்டனர். சிறிது நேரத்தில் ஒரு சப்ளையர் வந்து நின்ருன். அவனிடம் மெனுகார்டைக் கொண்டுவரும்படி

சொன்னார் பீதாம்பரம். (ஹோர்ட்டலில் என்னென்ன பொருள்கள் தயாரிலிருக்கின்றன, அவைகளின் விலைகள் இதுபோன்ற விவரங்கள் கொண்ட அட்டைக்கு 'மெனு' என்று பெயர். அநேகமாகப் பெரிய ஹோட்டல்களிலெல்லாம் இந்த 'மெனு கார்டு' உண்டு. ஒவ்வொரு மேஜையிலும் ஒவ்வொரு 'மெனு கார்டு' வைக்கப்பட்டிருக்கும்) மெனுவைப் பீதாம்பரத்திடம் கொடுத்தான் சப்ளையர். கார்டில் டைப் அடிக்கப்பட்டிருந்த ஒவ்வொன்றையும் நிறுத்தி நிறுத்திப் படித்துக் கொண்டிருந்த பீதாம்பரம் அதிர்ச்சியடைந்து விட்டவரைப் போல சற்று நின்று விட்டார். உடனே சமாளித்துக் கொண்டார். ஒன்றும் நடக்காதது போல முகத்தை மாற்றிக் கொண்டு சப்ளையருக்குப் போக்குக் காட்டுவதற்காக ஏதோ உண்பதற்குக் கொண்டு வரச் சொன்னார்.

சப்ளையர் தங்கள் மேஜையைவிட்டு நகர்ந்ததும் பீதாம்பரம் தம் கையில் வைத்திருந்த மெனுகார்டை இன்னொரு முறை நன்ருகப் பார்த்துவிட்டு,

"சுகுமாரா! அந்தப் பயங்கரச் சீட்டில் ஒன்றே ஒன்றை மட்டும் என்னிடம் கொடு" என்றார்.

சுகுமாரன் 'சட்' டென்று தன் பைக்குள் கையை வைத்துப் பதனமாக ஒரே ஒரு பயங்கரச் சீட்டை மட்டும் எடுத்து மறைவாகக் கொடுத்தான். அதை வாங்கி உள்ளங்கையில் மறைத்து வைத்துக் கொண்டு மெனுவையும் அந்தச் சீட்டையும் ஒத்துப் பார்த்தார். ஒன்றுக்கு மூன்று முறை இரண்டையும் மாறி மாறிப் பார்த்தார். திடீரென்று அவர் முகத்தில் அதிசயமான மாற்றம் தெரிந்தது. வெகு உற்சாகத்தோடு,

"சுகுமாரா! நமக்கு வந்த கடிதத்தையும், சுந்தரமூர்த்தியின் அறையில் கிடைத்த கடிதத்தையும் கொடு" என்றார்.

சுகுமாரன் அந்த இரண்டு கடிதங்களையும் முன் போலவே வெகு பத்திரமாக மறைத்துக் கொடுத்தான். சுந்தரமூர்த்தியின் கடிதத்தை மெனுவுடன் ஒத்திட்டுப் பார்த்தவர், உதட்டைப் பிதுக்கிக் கொண்டு திருப்பிக் கொடுத்து விட்டார். தமக்கு வந்த கடிதத்தைப் பார்த்தார். இதற்குள் சப்ளையர் வந்து விடவே கடிதத்தை மறைத்துவிட்டு மெனுவைக் கீழே வைத்தார். பீதாம்பரம் கேட்ட பொருள்களைக் கொண்டு வந்து வைத்துவிட்டுக் காலைத் தேய்த்துக் கொண்டு அங்கேயே நின்று கொண்டிருந்தான் சப்ளையர். அவனை எப்படியாவது அங்கிருந்து விரட்டியடிக்கவேண்டுமென்று எண்ணியபீதாம்பரம் மேலும்வேறு

என்னென்ன வெல்லாமோ கொண்டு வரச் சொன்னார். சப்ளையர் நகர்ந்தான். சுகுமாரன் பக்கம் திரும்பி, உற்சாகத்தோடு சொன்னார் பீதாம்பரம் :

"சுகுமார்! நமக்கு வந்த கடிதமும், மாயச்சீட்டுகளும், இந்த மெனுகார்டும் ஒரே மிஷினில் டைப் செய்யப்பட்டவை" என்றார்.

உடனே மெனுகார்டை எடுத்து வைத்துக் கொண்டு ஒத்துப் பார்த்த சுகுமாரன் திருப்தியோடு பீதாம்பரத்தைப் பார்த்தான்.

"கொலையாளி இங்கு வந்து வைத்தியநாதனை மிரட்டி எல்லாவற்றையும் டைப் செய்து கொண்டான். அவன் வழக்கமாகக் குறிப்பிட்ட நேரத்தில் வருவான். அந்த நேரத்தில்தான், அவனைக்காட்டிக்கொடுப்பதாக வைத்தியநாதன் நமக்குத் தகவல் கொடுத்தது" என்றார் பீதாம்பரம்.

"அப்படியானால் கொலையாளி யார் என்று உங்களால் யூகிக்கமுடிகிறதா?"

"நாராயணனோ, சுந்தரமூர்த்தியோ, மனோஹரனோ கொலை செய்யவில்லை. புஷ்பா கூடக் கொலை செய்ய வில்லை" என்று அமரிக்கையாகக் கூறினார் பீதாம்பரம்.

"அப்படியானால் யார்?" என்று பொறுமையிழந்து கேட்டான் சுகுமாரன்.

"சரியாக இன்னும் அரைமணி நேரம் பொறுத்துப்பார். ஆனால் புஷ்பாவைக் கொலையாளி ஆட்டிவைக்கிறான் என்று மட்டும் புரிகிறது. நான் கூட கொலையாளியை ஓரளவுக்குத்தான் யூகிக்கிறேன்" என்றார் பீதாம்பரம்.

## 9. 'மாயாவுக்கு வாருங்கள்!'

மணி எட்டேகால்.

பீதாம்பரம் சொன்னபடி கொலைகாரன் யார் என்று இன்னும் கால்மணி நேரத்தில் தெரிந்து விடும்.

இன்னும் பதினைந்தே நிமிடங்கள்!

கொலையாளி வெளியேயிருந்து வரப்போகிறானா? அல்லது உள்ளேயே இருக்கிறானா என்று சுகுமாரனுக்குப் புரியவில்லை. சுற்றுமுற்றும் ஒருமுறை பார்த்தான். யாரும் அவர்களைக்

கவனிப்பதாகத் தெரியவில்லை. கொலையாளி ஒருவேளை மாடியி லிருக்கிறனே......? சுகுமாரனுக்கு என்னவோ மாதிரியிருந்தது. சப்ளையர், பீதாம்பரம் சொன்னபடி மீண்டும் உணவுப்பொருள் களைக் கொண்டு வைத்தான். முதலில் கொண்டு வந்ததை இன்னும் தொட்டுக் கூடப் பார்க்காதது இப்போது தான் பீதாம்பரத்துக்கும் சுகுமாரனுக்கும் தெரிந்தது. விறு விறு வென்று தட்டுகளை முன்னல் இழுத்து வைத்துக் கொண்டு உண்ண ஆரம்பித்தனர். சப்ளையர் அவர்களை மேலும் கீழும் பார்த்தான். 'சுத்தப் பைத்தியங்களாகத்தானிருக்கவேண்டும். இல்லாவிட்டால் சூடு இருக்கும் போதெல்லாம் சும்மாயிருந்து விட்டு ஆறி அவலான பிறகு தின்கிறர்களே' என்று எண்ணி ஏளனமாகத்தான் பார்த்தான். அவன் அப்படிப்பார்த்தது கூட சுகுமாரனுக்குச் சந்தேகத்தைக் கொடுத்தது.

"இரண்டு ஐஸ் வாட்டர் கொண்டா" என்று சொல்லி சப்ளையரை அப்புறப்படுத்திவிட்டு "அவன் பார்வையைப் பார்த் தால் எனக்குச் சந்தேகமாயிருக்கிறது ஸார்!" என்றுன சுகுமாரன்.

"ஏய்! ஏய்! சப்தம் போட்டுச் சொல்லாதே. அவன் புழங்கும் தட்டும் அவன் வந்தவுடன், நாம் சந்தேகப்படுகிறே மெனச் சொல்லிக் கொடுத்துவிடும்" என்று ஹாஸ்யம் பேசினர் பீதாம்பரம்.

இதைக் கேட்டதும் வெட்கிவிட்டான் சுகுமாரன். முகத் தில் அசட்டுப் புன்னகை ஒன்றை வரவழைத்துக் கொண்டு, "இல்லை ஸார்! அவன் அப்படிப் பார்த்தான்" என்று சொன்னுன்.

அவனுடன் ஒப்புக்குச் சிரித்துக் கொண்டே பீதாம்பரம் சுவர்க்கடிகாரத்தைப் பார்த்தார். எட்டு இருபத்து மூன்றுகி விட்டது.

இன்னும் ஏழு நிமிடங்கள்.

அவர் விதித்த கெடுப்படி கொலையாளியை இன்னும் ஏழு நிமிடங்களில் சந்திக்கப் போகிறர். அவனைச் சந்திப்பது அவருக்கு அவ்வளவு பெரிதாகத் தோன்றவில்லை. ஆனல் அவன் விளம்பரப்படுத்திக் கொலை செய்த சாதுர்யமும் தைரிய மும் அவனைக் காணும் ஆவலைத் தூண்டின. ஒரு குற்ற வாளியைத் தந்திரமாக, அவன் எதிர்பார்க்காதபடி பிடிக்கப் போகிறேம் சரியான தண்டனை கொடுக்கப் போகிறேம் என்ற எண்ணம் இருந்தாலும் அந்த விசித்திரக் குற்றவாளி, ஊரே

'ஓஹோ' என்று வியக்கும் தம்மையே மடக்கிவிட்டானே என்ற ஆச்சரியத்தில் அவன் வரவை எதிர்நோக்கிக் கொண்டிருந்தார்.

மணி எட்டு இருபதஞ்சைந்து.

சுகுமாரனின் மனம் பட படவென்று அடித்துக்கொண்டது. முன்பு கொலைநடக்கும் நேரத்தை அறிவித்து அந்த நேரத்துக்காக அவனும் மற்றவர்களும் காத்துக்கிடந்தார்களே, அப்போதிருந்ததைவிட சுகுமாரனின் மனம அதிகப் பரபரப்படைந்திருந்தது. ஏனென்றால், அவ்வளவு துணிகரமாக நடத்திய கொலையாளியே நேரில் வருவது எப்படியிருக்கும்? பெரிய முள் ஐந்திலேயே நின்று ஏன் சதிசெய்கிறது என்று அதைச் சபித்துக்கொண்டேயிருந்தான் சுகுமாரன்.

இன்ஸ்பெக்டருக்கு இருப்புக் கொள்ளவில்லை. மணியைப் பார்த்தார்.

எட்டு இருபத்தெட்டு.

பீதாம்பரம் அவசரப்படுத்தியது போல இங்கு ஒன்றும் நடக்கவில்லையே என்று அவர் மனம் ஏங்கியது. இன்னும் எத்தனை நேரம் அந்த அறையிலேயே திருட்டுத்தனமாக ஒளிந்திருப்பது என்று மனம்புழுங்கிக் கொண்டு உட்கார்ந்திருந்தார்.

மணி ஒருமுறை அடித்தது.

எட்டரை!

ஹோட்டலுக்கு வெளியே வாசலில் ஒரு கார் வெகு வேகமாக வந்தது போல் 'சர்' ரென்று நிற்கும் சப்தம் கேட்டது. இன்ஸ்பெக்டர் கதவிடுக்கு வழியாகப் பீதாம்பரத்தையும் சுகுமாரனையும் கவனித்தார். இருட்டில் அவர்கள் முகம் தெளிவாகத் தெரியவில்லை. வாசல் பக்கம் பார்த்தார். அவ்வளவு தான். அவர் சப்த நாடியும் நின்றுவிடும் போலிருந்தது. கண்ணைக் கசக்கிக் கொணடு பார்த்தார். அலங்காரமாக உடுத்திக்கொண்டு கலகலவென்று சிரித்தவாறு புஷ்பா வந்துகொண்டிருந்தாள். ஊரெல்லாம வலைபோட்டு அரிக்க, போலீஸ்காரர்களையும் ஸி.ஐ.டிக்களையும் சற்றுமுன்தான் அனுப்பிவிட்டு வந்திருக்கிறார். இப்போது அதே புஷ்பா, மனசில் ஒன்றுமில்லாதவள் போல வாய்விட்டுச் சிரித்துக் கொண்டு எவ்வளவு சுதந்திரமாக வருகிறாள்? அவளுக்குப் பின்னால் அவருடைய பார்வை சென்றதும் அவர் உடலில் மின்சாரம் பாய்ச்சியது போலாகிவிட்டது. தாம இந்த உலகத்தில்தான் இருக்கிறோமா என்று ஒருகணம் சந்தேகப்பட்டுவிட்டார்.

புஷ்பாவின் பின்னால் கோபி சிரித்தபடி வந்து கொண்டிருந்தார்.

நாராயணனின் சிற்றப்பா கோபி!

கொலை செய்யப்பட்ட டாக்டர் விமலநாதனின் உடன் பிறந்த தம்பி கோபி!

சர்க்கஸ் கம்பெனி வைத்து நஷ்டமடைந்து ஊரோடு வந்து விட்ட கோபி; நாராயணனின மனைவி மக்கள் தெருவில் நிற்பது கண்டது மனம் சகியாது தம்மிடம் வந்து கெஞ்சிய கோபியே தான்!!

இன்ஸ்பெக்டர் தம் கையைக் கிள்ளிவிட்டுக் கொண்டு மீண்டும் பார்த்தார். ரோஹிணியின் தங்கை புஷ்பாவும் கோபியும் ஒரு மேஜை முன் எதிர் எதிரே உட்கார்ந்தனர். இருவரும் இன்னும் மனம்விட்டுச் சிரித்துப் பேசிக் கொண்டுதானிருந்தார்கள்.

ஏகாம்பரம் அடைந்த அதே உணர்ச்சி தான் சுகுமாரனுக்கும் ஏற்பட்டது என்று சொல்ல வேண்டியதில்லை!

பீதாம்பரம் பயந்தபடி, புஷ்பாவும் கோபியும் தூரத்தில் போய், அவர் கண் மறைவில் உட்கார்ந்துவிடவில்லை. சற்று அருகிலேயே அவர்கள் அமர்ந்தது அவருக்கு ஆறுதலாயிருந்தது. தலையைக் குனிந்து கொண்டு ஓரக்கண்ணால் அவர்களையே பார்த்துக் கொண்டிருந்தார். அவர் காட்டிய ஜாடைப்படி சுகுமாரன் தன்னை மறைத்துக் கொண்டான். அவன் இதயம் நூறு மைல் வேகத்தில் அடித்துக் கொண்டது. கோபியோ புஷ்பாவோ தங்களைப் பார்த்து விடுவதற்குள் முந்திக் கொள்ள வேண்டுமெனப் பறந்தான். பீதாம்பரம் காட்டிய பொறுமை அவனுக்கு ஒரே எரிச்சலாயிருந்தது. இதோ அதோ என்று நிமிடங்கள் பறந்துகொண்டிருந்தன.

பீதாம்பரம் தம் நாற்காலியைவிட்டு எழுந்தார்.

புஷ்பாவும் கோபியும் கவனிக்கவில்லை.

சுகுமாரனும் எழுந்தான்.

சற்று வெளிச்சத்துக்கு வந்ததும் இன்ஸ்பெக்டருக்கு ஜாடை காட்டினார் பீதாம்பரம்.

தம் கால் சட்டைப் பைக்குள்ளிருந்து ஒரு கத்தியை வெளியே எடுத்தார் பீதாம்பரம். மின்சார ஒளியில் அது பளபளவென்று மின்னியது. சுகுமாரனுக்கு ‘திக்’ என்றது.

பீதாம்பரம் அவர்களருகில் சென்று விட்டார். அவர்களுக்குத் தீராப் பசி. இதுவரை இருந்த இரத்தபசி நீங்கி இன்றுதான் உணவுப்பசி எடுத்திருக்கிறது. உண்ணும் மயக்கத்தில் பீதாம்பரம் அருகில் வருவதைக்கூட கவனிக்கவேயில்லை. கோபியின் தட்டுக்கும் புஷ்பாவின் தட்டுக்குமிடையே வேறொரு பீங்கான் தட்டில், நறுக்கப்பட்ட ரொட்டித் துண்டுகள் உயரமாக அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. பீதாம்பரம் தாம் வைத்திருந்த கத்தியை அந்த ரொட்டியில் குத்தி நிறுத்தி கத்தியைப் பிடித்தபடி நின்றார்.

'சட்' டென்று நிமிர்ந்து பார்த்தாள் புஷ்பா. மறுகணமே 'வீல்' என்று கத்திவிட்டாள். அவ்வளவுதான்; அப்படியே மயங்கிவிழுந்து விட்டாள்.

கத்தியைக் கண்டு கோபி அதிர்ந்துவிட்டார் போலிருக்கிறது, வாயில் கையை வைத்தவர், கையை எடுக்காமல் குனிந்தபடி அந்தக்கத்தியையும், பிடித்திருந்த கையையும பார்த்துக் கொண்டே சிறிது நேரம் இருந்துவிட்டார்.

பீதாம்பரம் ஒன்றுமே பேசவில்லை.

இன்ஸ்பெக்டர் துப்பாக்கியை நீட்டியபடி நின்று கொண்டிருந்தார்.

மெதுவாக நிமிர்ந்தார் கோபி. அவர் முகம் பயங்கரமாக மாறிக்கொண்டே வந்தது. எந்த நேரத்திலும் எகிரலாம் என்று எண்ணிய சுகுமாரன் எதற்கும் தயாராய் நின்று கொண்டிருந்தான். ஹோட்டலிலுள்ள அத்தனை பேரும் செயலிழந்து அப்படி அப்படியே நின்றுவிட்டனர். விநாடி நேர நிகழ்ச்சி இது.

எல்லோரும் எதிர்பாராதது நடந்தது.

கோபியின் முகத்தில் புன்னகை அரும்பியது.

அடுத்த கணம், அவர் முகம் விவரிக்க முடியாத சோகத்தைச் சுமந்து களைத்துவிட்டதைப்போல சிறுத்துக் கறுத்தது. வியர்வை முத்து முத்தாக அரும்பியது.

"புஷ்பாவின் முகத்தில் சிறிது தண்ணீரைத் தெளித்து அவளை மயக்கம் தெளியவையுங்கள். ஆபத்து ஒன்றுமில்லையென்று அவளுக்கு ஆறுதல் சொல்லுங்கள். ஸ்டேஷனுக்குப் போகலாம்" என்றார் கோபி. அவர் பேச்சில் படபடப்போ பயமோ ஏதும் தெரியவில்லை; அமைதியாகவே பேசினார். சுகுமாரனுக்கு மட்டுமென்ன, பீதாம்பரத்துக்கே ஆச்சரியமாகிவிட்டது கோபி காட்டிய அமைதி.

"இது நீங்கள் திருவிதாங்கூரில் சர்க்கஸ் நடத்தும்போது வாங்கியகத்தி; இல்லையா?" என்று கோபியிடம் கேட்டார் பீதாம்பரம்.

"ஆமாம்"

"நீங்கள் சர்க்கஸ் காரராயிருக்கப் போய்த்தான், வைத்திய நாதனைத் தூர நின்று கொண்டே கத்தியால் எறிந்து கொன்றீர்கள்; அப்படித்தானே?"

"எல்லாக் கொலைகளையுமே அப்படித்தான் செய்தேன். என் சர்க்கஸ் கம்பெனியில் நான் செய்யும் வித்தை அதுதான். கண்ணைக் கட்டி விட்டு, தூரத்தில உள்ள பலகையின் முன் ஒரு பெண்ணை நிறகவைபபேன். அவள் மேல்படாதபடி கத்தியை எறிவேன். நான் கத்தியைஎறியும்போது கண்கட்டப்பட்டு பலகைகளில் சாய்ந்து நிற்பவள் புஷ்பாதான். அப்போதெல்லாம் இதோ அதோ என்று உயிர் போவதுபோல பதறியவள் இந்தப் புஷ்பாதான்."

இதைக் கேட்டதும் மூவரும் ஆச்சரியப்பட்டுவிட்டனர். ஒருவேளை ரோஹிணி தன் டயரியில் குறிபபிட்டதுபோல புஷ்பா கோபியுடன் தான் ஓடியிருப்பாளோ என்று எண்ணினான் சுகுமாரன்.

'நாங்கள் இருவரும் நேசித்தோம். கட்டுப்பாடு அதிகமாயிற்று புஷ்பாவுக்கு. கண்காணாத நாட்டுக்குச் சென்று விட்டோம். விதி எங்களை இங்கு இழுத்துக் கொண்டு வந்தது" என்றார் கோபி.

பீதாம்பரம் செயலிழந்து நின்றார். இன்ஸ்பெக்டர் துப்பாக்கியை ஒரு கையால் பிடித்துக் கொண்டு, மேஜை மீதிருந்த டம்ளரிலிருந்து தண்ணீரை எடுத்து புஷ்பாவின் முகத்தில் தெளிக்க முயன்றார். சுகுமாரன் முந்திக்கொண்டு நாற்காலியிலேயே விழுந்து கிடந்த புஷ்பாவின் முகத்தில் தண்ணீரைத் தெளித்தான்.

"புஷ்பாவுக்கு முழுக்க நினைவு வருவதற்குள், நாம் போக வேண்டும. நான் பிறகு எல்லா விவரங்களையும் கூறுகிறேன்" என்று அவசரப்புட்டார் கோபி.

போலீஸ் ஸ்டேஷன் முன்பு ஜீப் கார் வந்து நின்றது. கோபிக்கும் புஷ்பாவுக்கும் முன்னும் பின்னுமாக பீதாம்பரமும் மற்றவர்களும் நடந்து சென்றார்கள்.

"புஷ்பாவை, நாம் பேசிக் கொள்வது கேட்காத இடத்தில் கொண்டு வையுங்கள். அவளுக்குப் பைத்தியம் பிடித்துவிடும்" என்று கெஞ்சினுர் கோபி.

அவ்வாறே செய்தார் பீதாம்பரம்.

கோபி பேச ஆரம்பித்தார்.

"பிறந்த பூமியில் எந்தப் பாவியின் கண்ணிலும் படாமல் சுகமாக வாழலாமென்று எண்ணித்தான் சர்க்கஸ் கம்பெனியை ஆரம்பித்து ஊர் ஊராகச் சுற்றினேம். நானும புஷ்பாவும திருவனந்தபுரத்தில் ரிஜிஸ்தர் கல்யாணம் செய்துகொண்டோம். ஒரு குறையுமின்றி வாழ்ந்தோம். விதி குறுக்கிட்டது. சர்க்கஸ் கம்பெனியை மூடுமளவுக்கு நிலைமை முற்றிவிட்டது. கம்பெனியை நஷ்டத்துக்கு விற்று விட்டு புஷ்பாவை அழைத்துக்கொண்டு இங்கு வந்தேன். என் அண்ணன் விமலநாதனேடு ஒன்ருக வாழ விரும்பவில்லை. யார் கண்ணிலும் படாமல் புஷ்பாவை மறைத்து வைத்துத் தனியாக வாழ்ந்து வந்தேன். அண்ணனிடம் என் பாகத்தைப் பிரித்துக்கேட்டேன். இப்போது அப் போது என்று நாட்களைக் கடத்திக் கொண்டு வந்தவர், கோர்ட்டில் செலவழிக்க என்னிடம் பணமில்லை யென்று தெரிந்து கொண்டார். ஒன்றில் அரைக்கால்பாகம் தருவதாகச் சொன்னுர். அதற்கு ஏதேதோ நொண்டிக் காரணங்களைக் கூறினுர்.

"வறுமை முற்றிக் கொண்டே வந்தது. நான் நொடிந்து விட்டேன் என்று வெளியே காட்டிக்கொள்ளவில்லை. பசி பிடுங்கி எடுக்கும் நிலையில்தான புஷ்பாவை ரோஹிணியிடம அனுப்பினேன். அவளும் என் அண்ணன் மாதிரியே கையை விரித்து விட்டாள். புஷ்பாவின் மாமா திருஞானம ஆதரவுகாட்டுவது போல நடித்து மோசம் செய்து விட்டார். இது போதாதா, நான் இந்த மூன்று கொலைகளையும் செய்ததற்கு? பசியால் சாகப் போகும் நான் இவர்களை ஊரறியக் கொலை செய்ய வேண்டுமென்று திட்டமிட்டுக் கொன்றேன். ஆனுல் துரதிருஷ்ட வசமாக வைத்தியநாதனையும் கொல்ல நேர்ந்துவிட்டது. அவனிடம், டைப் அடித்த விஷயத்தை வெளியிடாதிருக்கும்படி மன்ருடிக் கேட்டுக் கொண்டேன். ஆனுல் அவன் வாக்குத் தவறிவிட்டான்.

"மாடியிலிருந்து விழுந்து வரதன் செத்ததற்கு நான் காரணமல்ல. உண்மைக் கொலையாளியை மறைப்பதற்காகவே வரதன் மீது சந்தேகம் விழும்படி ரோஹிணியின் கைப் பையில் கடிதம் எழுதிக் கசக்கிப்போட்டேன். திருஞானத்தின் அறை

திறக்கப்பட்டுக் கிடந்தது என் திட்டத்தால்தான், 'தி' என்ற எழுத்தில் ஆரம்பிக்கும் பெயருடையவரை நீங்கள் கண்டு பிடித்து விடுவீர்கள் என்று எண்ணியே அடையாளம் தெரிந்துகொள்ள வேண்டாம் என்று புஷ்பா மூலமாக அந்த அறையில் கிடந்த திருஞானத்தின் போட்டோவை அபகரிக்கச் செய்தேன்'' என்று நிறுத்தினர் கோபி. அவர்முகம் வெளுத்திருந்தது. நீண்ட பெருமூச்சு விட்டுவிட்டு எல்லோரையும் ஒருமுறை பார்த்தார்.

பீதாம்பரம் 'விறு'ட்டென்று திரும்பிச் சிறைப்பக்கம் சென்ருர். சிறிது நேரத்தில் நாராயணன், சுந்தரமூர்த்தி, மனோஹரன் ஆகியோரை அழைத்துக் கொண்டுவந்தார்.

இன்ஸ்பெக்டர், கோபியின் கைகளில் விலங்கைப் பூட்டினர்.

நாராயணன், "சித்தப்பா" என்று, அந்தப் போலீஸ் ஸ்டேஷனே அதிரும்படி அலறிவிட்டான்.

"உன் சித்தப்பா வழிதவறிவிட்டார் நாராயணு" என்று அமைதியாகச் சொன்னர் பீதாம்பரம்.

முற்றும்.

Printed at the Rajah Power Press, Madras-14.



**எ.எம்.மீரான்**
**நாவல்**

"வி-ரோ-தி" என்ற மர்மமான மூன்று எழுத்துக்கள் கொலையாளியின் அபாயச் சின்னம். மலையாளச் சூரிக்கத்தி அவனுடைய கொடிய ஆயுதம்.

இதெல்லாவற்றையும் விட, கொலை நடப்பதற்கு முந்தி, அதைப்பற்றி துப்பறியும் பீதாம்பரத்துக்குத் தெரியும் வகையில் பத்திரிகைகளில் விளம்பரம் செய்து கொலை புரியும் பயங்கரச் செயல்!

கொலையாளி மாயாவியா? மந்திரம் கற்றவனா? பேயா? பிசாசா? பின் யார்?

பக்கத்துக்குப் பக்கம் மர்மம் நிறைந்த ருசிகரமான நாவல் இது. இப்படி ஒரு புதுமையான சுவைமிக்க துப்பறியும் நாவலை நீங்கள் இதற்கு முன் படித்திருக்க முடியாது என்று சொல்லுகிறோம்.

**படித்து முடித்துத் தீர்ப்புக் கூறுங்கள்!**

PREMA ART PRINTERS, MADRAS-24.